# கல்கி

KALKI 3.11.85 ரூ 1.50



அடுத்த இதழில் 'லக்ஷ்மி' எழுதும்
சொர்க்கத்தின் கதவுகள்
தொடர்கதை ஆரம்பம்.

# போபால் விஷ வாயு மரணங்கள்; கடமையில் தவறிய டாக்டர்கள்...

## —அதிர்ச்சி தரும் அறிக்கை

போபால் விஷவாயுக் கசிவினால் ஆயிரக்கணக்கான உயிர்கள் பலியானதும், பலர் குருடானதும், அதன் பின்விளைவுகளாக அங்கு இப்போது பிறக்கின்ற குழந்தைகள் கூட அங்கஹீனமாகப் பிறந்து கொண்டிருப்பதும் தெரிந்த சோகம். ஆனால் அந்த விஷவாயுக் கசிவின் போது பாதிக்கப்பட்டவர்களுக்கு அளிக்கப்பட்ட சிகிச்சையில் மகத்தான தவறு நடந்திருக்கிறது என்பதுதான் அதிர்ச்சி தரும் செய்தி.

ஆம்; தமிழக ரசாயனப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கம் ஒரு நிபுணர் குழுவை போபாலுக்கு அனுப்பி வைத்து ஓர் அறிக்கை தயார் செய்து தமிழக மருத்துவக் கல்வி இயக்குனரிடம் சமர்ப்பித்திருக்கிறது. அந்த அறிக்கையில்தான் இப்படி ஒரு அதிர்ச்சி தரும் செய்தி அடங்கியிருக்கிறது. இந்த அறிக்கை, கடந்த பிப்ரவரி 12—14 தேதிகளில் போபால் நிகழ்ச்சி பற்றி வாஷிங்டனில் உலக வங்கி நடத்திய கருத்தரங்கில் மிகச் சிறந்த அறிக்கையாக வரவேற்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. அந்த அறிக்கையில் அப்படி என்னதான் கூறப்பட்டுள்ளது? தமிழ்நாடு ரசாயனப் பொருள்கள் உற்பத்தியாளர்கள் சங்கத் தலைவர் எஸ். கிருஷ்ணஸ்வாமியே கூறுகிறார்.....



எஸ். கிருஷ்ணஸ்வாமி

கேள்வி: உங்கள் விசாரணையை எப்படிப்பட்ட சூழ்நிலையில் தொடங்கினீர்கள்?

கிருஷ்ணஸ்வாமி: போபால் சென்று நாங்கள் விசாரணையைத் தொடங்கிய போது, கார்பைட் தொழிற்சாலைக்குள் நுழையக் கூட எங்களுக்கு அனுமதி இல்லை. அரசாங்க ஊழியர்களெல்லாம் மனம் விட்டுப் பேசவே பயப்படும் நிலை. இப்படிப்பட்ட தொரு சூழ்நிலையில்தான் நாங்கள் பாதிக்கப்பட்டவர்களைச் சந்தித்து விசாரணையைத் தொடங்கினோம்.





* கடந்த அக்டோபர் மாத ப்ரோப் இதழில் 'The Cyanide Conspiracy' என்ற தலைப்பில் பாலாசங்கர் எழுதிய கட்டுரையிலிருந்து சில குறிப்புகள்:

* கடந்த டிசம்பர் 4 ஆம் தேதி, Dr. Max Daunderer என்ற ஜெர்மானிய விஷ முறிவு நிபுணர் போபால் விஷவாயுவால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி புரிவதற்கென்றே இந்திய அரசின் அனுமதியுடன் ம்யூனிச்சிலிருந்து வந்தார். சயனைடு விஷவாயுவுக்கு முறிவு மருந்து சோடியம் தயோ சல்பேட் என்பதை உணர்ந்து அதையும் ஏராளமாகக் கொண்டு வந்திருந்தார். போபாலிலுள்ள ஹமீதியா மருத்துவக் கல்லூரியைச் சேர்ந்த டாக்டர் ஹீரேஷ் சந்திராவும் அவருடைய முறிவு மருந்தை ஆமோதித்தார்.

ஆனால் திடீரென்று அந்த ஜெர்மானிய டாக்டர் டெல்லிக்கு அழைக்கப்பட்டார். இந்திய அரசு அவரைத் திரும்பிப் போ என்று ஆணையிட்டது. அந்த 'மகான்' இந்திய நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்ட பிறகும் மனம் குன்றாமல் இருபதாயிரம் ஊசி மருந்துக் குழல்களை அனுப்பி வைத்தார். ஆனால் நமது அரசாங்க மருத்துவர்கள் அவற்றை உபயோகிக்காமல்

'கேள்வி: விசாரணையின் மூலம் கண்டு பிடித்த முக்கியமான விஷயம்?

கிருஷ்: சயனைடு விஷவாயுவைச் சுவாசித்தால் இருமல், மார்பு வலி, மூச்சுத் திணறல், நரம்புத் தளர்ச்சி போன்றவை ஏற்படும். போபாலில் இப்படித்தான் ஏற்பட்டிருக்கிறது. அப்படிப்பட்டவர்களுக்கு முதலுதவி சிகிச்சை அளித்த டாக்டர்கள் கேஸ் ஷீட்டுகளில் 'இருமல்' என்று மட்டுமே குறித்திருக்கிறார்கள். சயனைடுக்கான விஷ முறிவு எதுவும் உடனடியாகக் கொடுக்கப்படவில்லை. கொடுத்திருக்க வேண்டும். சுருக்கமாகச்



* போபால் விஷவாயுவால் பாதிக்கப்பட்டவர்கள்.

பூட்டி வைத்துவிட்டனர்!

* போபால் விஷவாயுக் கசிவைக் கேள்விப்பட்டவுடனேயே அமெரிக்காவிலுள்ள டாக்டர் அவேஷியா, சயனைடு விஷமாக இருந்தால் தயோ சல்பேட் அளிக்கும்படி தந்தி கொடுத்தார்.

* இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகமும் சோடியம் தயோ சல்பேட்டை சிபாரிசு செய்தது.

* ஆனால் போபால் யூனியன் கார்பைட் நிறுவனம் அபகீர்த்தி இன்றி தப்பித்துக் கொண்டு விடலாம் என்று எண்ணியதோ என்னவோ, கசிந்த வாயு விஷவாயு அல்ல என்ற கருத்தைப் பரப்பவே முயன்றது. இதனால் குழப்பம் ஏற்பட்டது. தவறான சிகிச்சை அளிக்கப்பட்டது. சயனைடுதான் என உணர்ந்து அதற்கான சரியான சிகிச்சை தொடங்க மிகுந்த கால தாமதமாயிற்று. அதற்குள் விபரீதம் விளைந்து விட்டது.

* இந்த சிகிச்சையில் ஈடுபட்ட சில டாக்டர்களும், அவர்களுடைய உறவினர்களும் முன்பு யூனியன் கார்பைட் நிறுவனத்தின் 'பே லிஸ்ட்'டில் இருந்தவர்கள் என்று சொல்லப்படுகிறது!

சொன்னால் பாதிக்கப்பட்டவர்களுக்குச் சரியான முறையில் சிகிச்சையளிக்கப்படவில்லை.

கேள்வி: எப்படிக் கூறுகிறீர்கள்?

கிருஷ்: மனித சுவாசத்திற்குப் பிராண வாயு அவசியம். சயனைடு வாயு, பிராண வாயுவை அளிக்கும் என்ஸைம் அணுக்களைக் குறைத்துச் சுவாச கோசங்களில் பிராண வாயுவைத் தடை செய்து மூச்சுத் திணறலை ஏற்படுத்துகிறது. இதற்கு முறிவாக 0.3 கிராம் நைட்ரைட் இன்ஜெக்ஷன் செய்திருக்க வேண்டும். நைட்ரைட், சயனைடுடன் இணைந்து **Cynamethaglobin**-ஐ உண்டாக்குகிறது. அதனால் உடலுக்குத் தேவையான பிராண வாயு கிடைத்துவிடும். நைட்ரைட்டுடன் இணைந்த சயனைடு உடலில் தங்கினாலும் பாதகம். ஆகவே 12.5 கிராம் சோடியம் தயோசல்பேட் செலுத்தப்படும்போது சயனைடு உடலுக்கு வேண்டாத பொருளாக வெளியேறிவிடும்.

கேள்வி: இதையெல்லாம் போபால் டாக்டர்கள் செய்யவில்லையா?

கிருஷ்: இரண்டு நாட்கள் மட்டும் உபயோகித்து விட்டு நிறுத்தி விட்டார்கள். ஏன் என்று தெரியவில்லை. கார்பைட் கம்பெனிக்காரர்கள் **MIC (Methyl Iso cynate)** யிலிருந்து சயனைடு எப்படி உண்டாகுமென்று வாதித்திருக்கலாம்; சொல்லப் போனால் தங்களுடையது விஷவாயு என்றே அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. டாக்டர்களும் ஆன்டிபயாடிக்ஸ், ஸ்டிராய்டு மாத்திரைகளைக் கொடுத்திருக்கின்றனர். பாக்டீரியா கிருமியால் உண்டாகும் வியாதி இல்லாத போது இம்மாத்திரைகள் பயங்கர விளைவுகளை உண்டாக்கும். அதேநேரத்தில் MICயின் விஷத்தன்மையும் குறையாமல் பாதிப்பு மிகவும் அதிகமாகி விட்டது.

பேராசிரியர் திரிபாதி கூறுகிறார்:

**Methyl cynate** சுவாச கோசம் இருக்கும் எல்லாப் பிராணிகளையும் கொன்று விட்டது. கொசுக்களுக்கு சுவாச உறுப்பு இல்லாததால் அவை பிழைத்து விட்டன. MIC காற்றை



விட நான்கு மடங்கு கனமானது; விரைவில் பூமியில் படிந்துவிடும். இதனால்தான் உயரமான மாடிக் கட்டடங்களில் வசித்தவர்கள் பாதிக்கப்படவில்லை. எந்தெந்தப் பறவைகள் தங்கள் அலகுகளைச் சிறகுகளில் புதைத்துக் கொண்டு தூங்கினவோ அவை பிழைத்துக் கொண்டன!

கேள்வி: இதுபோன்றதொரு துயரம் இனி மேலும் நடக்காமலிருக்க என்ன செய்ய வேண்டும்?

கிருஷ்: கெமிகல்ஸ் உற்பத்தியில் ஏற்படும் விஷ வாயுக்கள் எதிர்பாராதவிதமாகக் கசிந்து வெளியேறினால் அதற்கான முறிவு மருந்து என்ன என்பதைத் தெளிவாக முடிவு செய்ய வேண்டும். அதைத் தொழிலகத்தைச் சுற்றியுள்ள டாக்டர்களிடம் பிரசாரம் செய்ய வேண்டும். இந்த முன் ஜாக்கிரதை இல்லாமல் எந்த ரசாயனத் தொழிலகமும் ஆரம்பமாக அனுமதிக்கக் கூடாது. ஏன்? தொழிலகத்திலேயே முழு நேர டாக்டர் நியமிக்கப்பட்டு அவர் அங்கு நேரக் கூடிய விபத்துகளுக்கான உடனடி சிகிச்சை பற்றி முழுமையாகத் தெரிந்து வைத்திருப்பது நலம். இதையெல்லாம் நாம் ஒழுங்காகச் செய்தால் இனி இப்படியொரு துயரம் நிகழவே நிகழாது!

பேட்டி: சுபஸ்ரீ



# பாரத் ஓவர்சீஸ் பைனான்ஸஸ் & இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன்

703 மவுண்ட்ரோடு, சென்னை-600006

# கூடுதல் 3% வட்டியை

## 1985 நவம்பர் 15ந் தேதி வரை

பிக்சட் டிபாசிட்டுகள்

| | |
|---|---|
| 30 நாள் தவணை | 25+3=28% (p.a.) |
| (குறைந்த காலம் 3 மாதங்கள்) | |
| 1 ஆண்டு | 27+3=30% (p.a.) |
| 2 ஆண்டுகள் | 29+3=32% (p..a) |
| 3 ஆண்டுகள் | 31+3=34% (p.a.) |
| 5 ஆண்டுகள் | 33+3=36% (p.a.) |

அரசு அங்கீகரிக்கப்பட்ட வங்கிகளுடைய பண சர்டிபிகேட் திட்டம்

5 ஆண்டுகள் — 20%
7 ஆண்டுகள் — 24%
10 ஆண்டுகள் — 27%

மற்ற திட்ட முறைகள்

மும்மடங்கு திட்டத்தில் ரூ. 1,000 5ஆண்டுகளில் ரூ. 3,000 ஆக மாறுகிறது.

ரிகர்ரிங் டிபாசிட் 17% • சேமிப்பு திட்டம் 10%

அதிக வட்டி • நேரந்தவறாமை • பாதுகாப்பு • நம்பிக்கை • திட்டமிட்ட முதலீடு

சென்னை அலுவலகம்:
ஓரியண்டல் சேம்பர்ஸ் 703, மவுண்ட்ரோடு, சென்னை-600 006
(ஆனந்த் தியேட்டர் அருகில்)

ஹைதராபாத் அலுவலகம்:
1-7-145-C 10, சுபாஷ் தியேட்டர் எதிரில், (ராமகிருஷ்ண ஸ்டுடியோ அருகில்)
முஷிராபாத் ஹைதராபாத்-500 048

மதுரை அலுவலகம்:
46, நேதாஜி ரோடு, மதுரை-625 001

பதிவு அலுவலகம்
17, ஜெனரல் பேட்டர்ஸ் ரோடு, சென்னை-600 002. போன்: 849838

எங்களது விசாகப்பட்டிணம் கிளை விரைவில் திறக்கப்படவிருக்கிறது.

Chhaya/BOF/631

# சத்தியத்தை அழிக்கும் சத்தற்ற திட்டங்கள்

## —ராயப்பா கூறுகிறார்



''கலோசனு சம்பத்துக்குப் பதில் கூறும் வகையில், 'புரட்சிகளும் புரட்சித் தலைவர் ஆட்சியும்' என்ற தலைப்பில் சென்ற இதழில் எழுதப்பட்டிருந்த தலையங்கம் பார்த்தேன். கூடவே, 'அப்பனுக்குச் சாராயம் குழந்தைக்குச் சத்துணவு' என்ற தலைப்பில் சில வாரங்களுக்கு முன் வெளியாகியிருந்த ஸ்பெஷல் ரிப்போர்ட்டும் என் நினைவுக்கு வந்தது. இவை தொடர்பாகவும் இவற்றைச் சம்பந்தப்படுத்தியும் எனக்குத் தோன்றுகிற சில கருத்துக்களை எழுதி இணைத்துள்ளேன்'' என்ற கடிதத்துடன் நமக்குத் தமது கட்டுரையை அனுப்பியுள்ளார் தமிழக அரசின் முன்னாள் தலைமைச் செயலாளர் ராயப்பா.

தமிழ்நாட்டில் காங்கிரஸ் ஆட்சியின் இறுதிக் காலத்தில் லஞ்சம் முளைவிட்டது. தி. மு. க. ஆட்சியின்போது வளர்ச்சியுற்றது. அ. தி. மு. க. ஆட்சியில் ஆல்போல் தழைத்தோங்கி விட்டது. லஞ்சம் என்பது ஒரு வாழ்க்கை முறையாக மட்டுமின்றி வாழ்க்கைத் தத்துவமாகவே மாறிவிட்டது!

இந்தப் பரிதாப நிலைக்குப் பல காரணங்களுள் முக்கியமான ஒன்று மதுவிலக்கு நீக்கப்பட்டதும் சாராயத் தயாரிப்பு விநியோகம் விற்பனை ஆகியவற்றுக்கு லைசென்ஸ் பர்மிட் முறை கொண்டுவரப்பட்டதுமாகும். மதுவிலக்கை ரத்து செய்ததிலும் அதன்பின் வழங்கப்பட்ட லைசென்ஸ்களிலும் லஞ்ச ஊழல்கள், முறைகேடுகள் இருந்துள்ளன என்று மாநில முதல்வர் மீதும் தமிழக அரசு மீதும் உள்ள குற்றச்சாட்டுக்களை விசாரிக்கவே மத்திய அரசால் நியமிக்கப்பட்டது ரே கமிஷன். அ. தி. மு. க. வும். இ. காங்கிரஸும் பொதுத் தேர்தலைப் பொறுத்த மட்டில் நேசப்பான்மையுடன் கூட்டணி அமைத்த போதிலும் இந்திராகாந்தியும் சரி, இன்றைய பிரதமரும் சரி ரே கமிஷனை இன்று வரை வாபஸ் பெறவில்லை என்பது கவனத்தில் கொள்ளத் தக்கது. எனவே, அ. தி. மு. க. ஆட்சி மீது ரே கமிஷன் என்ற கத்தி சதா தொங்கிக் கொண்டிருப்பதாகக் கருதலாம். இதன் விளைவாக முதல்வர் மத்திய அரசின் தாளத்துக்கு ஏற்ப ஆட வேண்டியவராகியுள்ளது துரதிர்ஷ்டமே.

மதுவிலக்கைத் தமிழக அரசு நீக்கியதற்கு முக்கிய காரணமாக அன்று கூறப்பட்டது, அரசுக்கு வருமானம் வேண்டும் என்பது மட்டுமல்ல, மக்கள் விஷப் பொருள்கள் கலப்படமான கள்ளச் சாராயத்தைச் சாப்பிட்டு மடிகிறார்கள் அல்லது உடல்நலம் கெடுகிறார்கள் என்பதும்தான். ஆனால் துரதிர்ஷ்டவசமாக இன்றைக்கும் கள்ளச்சாராயம் தமிழகத்தின் கிராமங்களிலும் நகரங்களிலும் கிடைக்கவே செய்கிறது. 'கிக்' அளிப்பதற்காக இதில் பல கெடுதலான பொருள்கள்' சேர்க்கப்படுகின்றன. இது தவிர பெர்மிட்



வந்தவர்: "என்னப்பா! சட்னி வேந்து நார் நாரா வர்தே...?"

சர்வர்: "இட்லிதான் பூப்போல இருக்குதே!"

வந்தவர்: ! ! ! ! ! !

—வி. சாரதி டேச்சு.

லைசென்ஸ் வழங்குவதில் கட்சியிலும் சரி ஆட்சியிலும் சரி எல்லா நிலைகளிலும் பெருமளவில் லஞ்சம் தலைவிரித்தாடுகிறது. மது விலக்கு ரத்தின் உடன் விளைவாகக் கள்ளச் சாராயம், போதை மருந்துகள் இவற்றைத் தடுப்பதிலும் கண்டு பிடிப்பதிலும் தண்டிப்பதிலும் நாட்டம் காணப்படுவதில்லையாதலால் மக்கள் இவற்றைத் தாராளமாகப் பயன்படுத்துகிறார்கள். இளைஞர்கள் போதை மருந்துகளுக்கு அடிமையாகிறார்கள். மது விலக்கை ரத்து செய்து அரசு அடையும் பணம் கறைபடிந்த பணம். அது மக்களையும் கெடுக்கிறது. அரசியல்வாதிகளையும் அரசு அதிகாரிகளையும் கெடுக்கிறது.

சத்துணவுத் திட்டம் என்ற பெயரே அர்த்தமற்றது. உலக வங்கி 1983ல் இங்கு வந்து ஆய்வு நடத்தித் தயாரித்தளித்த அறிக்கை இதனைச் சத்துணவு என்று ஒப்புக் கொள்ளவேயில்லை! உலக வங்கி தமிழகத்தின் மதிய உணவுத் திட்டத்துக்கு 50 கோடி கொடுத்திருக்கிறது. இன்று நிலைமை எப்படியென்றால் பெரும்புள்ளிகள் விஜயம் செய்யும் போது சத்துணவாகவும் மற்ற நேரங்களில் சத்தற்ற உணவாகவும் இத்திட்டம் செயல்படுகிறது. ஆங்காங்கே உள்ள அ. தி. மு. க. கட்சிக்காரர்களுக்குப் பணம் பண்ண வாய்ப்பளிக்கிறது.

மேற்கு ஜெர்மனியின் பொருளாதார மந்திரவாதி என்று கருதப்படுகிறவர் டாக்டர் எர்ஹார்ட். இந்த நிபுணர்தான், உலக யுத்தத்தின் முடிவில் பிடி சாம்பலாக அழிந்துபோன ஜெர்மனியை உன்னத நிலைக்கு உயர்த்தியவர். அமெரிக்க டாலரின் செல்வாக்கை விஞ்சியது ஜெர்மன் மார்க். இத்தகைய அறிஞர் எர்ஹார்ட் மத்திய அரசின் அழைப்பை ஏற்று இங்கு வந்திருந்த போது நிலைமையை ஆராய்ந்து பார்த்து விட்டுச் சொன்னார், "இந்தியா செல்வத்தைப் போதிய அளவு உற்பத்தி செய்யு முன்னரே அதை விநியோகிக்கப் பார்க்கிறது" என்று. அவரது இந்தக் கருத்து தமிழக அரசின் மதிய உணவுத் திட்டத்துக்கும் மிகவும் பொருந்தும். இத்திட்டம் மாநிலத்தின் பொருளாதாரத்தை எந்த விதத்திலும் உயர்த்தவில்லை. வோட்டுச் சேகரிப்பதற்கான ஒரு மார்க்கமாகவே விளங்குகிறது.

இந்த மாநிலத்தின் எதிர்காலப் பிரஜைகளான குழந்தைகளின் மன ஆரோக்கியத்தையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். அப்படிப் பார்க்கும் போது உழைப்பின் மேன்மையை உணர்ந்த, பிறர் தயவை நாடாத, தன் கையே தனக்குதவி என்று அறிந்து நம்புகிற சுயமரியாதை மிக்க எதிர்காலப் பிரஜைகளைத்தாம் நாம் உருவாக்க வேண்டும். இன்று உணவுக்காகக் கையேந்தி நிற்கிற குழந்தைகளிடம் இத்தகைய மனோபாவம் வளருமா என்பதை யோசிக்க வேண்டும். எனவே இது நீண்ட கால நோக்கில் நன்மை பயக்கும் திட்டம் அல்ல.

மதிய உணவுத் திட்டத்துககாக நடப்பு ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழகம் ஆண்டொன்றுக்குச் சராசரியில் 250 கோடி செலவிடும். ஜப்பானில் நடந்தது போல இந்தப் பணம் கிராமங்களிலும் நகரங்களிலும் சிறு தொழில்களில் முதலிடானால் அடுத்த பத்து ஆண்டுகளில் தமிழகத்தின் பொருளாதாரம் பிரமிக்கத்தக்க அளவில் முன்னேறும். அப்போது மதிய உணவு வழங்க அவசியமே இராது!

மதிய உணவுத் திட்டம் போன்ற உற்பத்திக்கு உதவாத இனங்களில் ஏராளமான பணம் செலவிடப்படுவதை இந்திராகாந்தியும் சரி, ராஜீவ் காந்தியும் சரி, கண்டு கவலைப் பட்டே பேசியிருக்கிறார்கள்.

ஆந்திர அரசு, மதிய உணவுத் திட்டத்துக்கான செலவை (ஐந்தாண்டுத்) திட்டச் செலவினங்களில் சேர்க்கக் கூடாது என்பதில் பிடிவாதமாக இருந்தது. இது சரியான முடிவு. ஏனெனில் திட்டச் செலவுகள் மாநிலத்தின் பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்ய ஏற்பட்டவை. இப்போது ஆந்திர அரசு உற்பத்திக்கு உதவாத மதிய உணவுத் திட்டத்தைச் சாத்தியமற்றது என ஒப்புக் கொண்டு கைவிட்டு விட்டது.

ஆனால் தமிழக அரசோ, மதிய உணவுத் திட்டத்துக்கான செலவில் ஒரு பகுதியை திட்டச் செலவினங்களில் சேர்த்துக் கொண்டு விட்டது! இதற்குத் தேர்தல் கூட்டணி என்ற அரசியல் ஆதாயத்தைக் காட்டி மத்திய அரசிடம் அனுமதியும் பெற்றுவிட்டிருக்கிறது. வேதனை என்னவென்றால் இதை ஏதோ பெரிய சாதனை போல் பறைசாற்றிக் கொள்ளவும் செய்கிறது!

ஆக என் கருத்துப்படி, "அப்பனுக்குச் சாராயம், குழந்தைக்குச் சத்துணவு" என்பது கூடத் தவறுதான்; "அப்பனுக்குச் சாராயம், பிள்ளைக்குப் பிச்சை! எங்கும் எதிலும் ஊழல்!" என்பதே சரி!

புகைப்படம்: மனோ

# இலவசம்!

## ஒவ்வொரு பாருடனும்
## ரூ.1/ மதிப்புள்ள
## ஒரு வெல்வெட்
## ஷாம்பூ பாக்கெட்!

## டோட்டல்

நீலநிற டிடர்ஜெண்ட் சலவை பார்







இந்த விசேஷ சலுகை
தமிழ் நாட்டில் மட்டுமே!

இந்த சலுகை
இல்லாமலும் இருப்பு
விற்பனைக்கு உள்ளது.

தயாரிப்போர்: கர்நாடகா சோப்ஸ் & டிடர்ஜெண்ட்ஸ் லிமிடெட்
விற்பனை ஏற்பாடு: மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்


புரட்சித் தலைவர் உருவத்தைக் குலைக்கப் பார்க்கிறாய்!
நீ தான் புரட்சித் தலைவர் உருவத் தைச் சிதைக்கப் பார்க்கிறாய்!
ஜெயலலிதா
காளிமுத்து


தென்னாப்பிரிக்க நிறவெறி அரசு மீது தடைகள்


தென்னாப்பிரிக்க அரசு


பஞ்சாயத்து தேர்தல்
ஒத்திவைப்பு
ஜனநாயகம்



**கல்கி**

1985 நவம்பர் 3
மலர் 44 இதழ் 14
குரோதன ஐப்பசி 18




# காளிமுத்து ராஜினமா செய்யட்டும்!

**அ**மைச்சர் காளிமுத்துவின் அறிக்கை 'அப்பன் குதிருக்குள் இல்லை' என்ற பழமொழியையே ஞாபகப்படுத்துகிறது.

ராபின் மெய்ன் என்பவர் சில பாங்குகளை சுமார் அறுபது லட்சம் ரூபாய்வரை மோசடி செய்தது தொடர்பாக விசாரணை நடத்தும் ஸி. பி. ஐ. அதிகாரிகள், காளிமுத்துவின் உதவியாளர் மாணிக்கத்தை மிரட்டினார்களாம்; அப்படி மிரட்டியவர்கள்; 'எம். ஜி. ஆர். ஆட்சி சீக்கிரமே முடியப் போகிறது அடுத்து ஜெயலலிதாதான் முதல்வர்' என்றார்களாம்! எனவே, 'ஐயய்யோ! எம். ஜி. ஆர். ஆட்சியைக் கவிழ்க்க ஜெயலலிதா மத்திய அரசுடன் சேர்ந்து சதி பண்ணுகிறார்!' என்று புலம்புகிறார் காளிமுத்து.

இப்படி பிரச்னையை அவர் திசை திருப்பப் பார்த்த போதிலும் உண்மையில் காளிமுத்துவின் இந்த அறிக்கையானது, ராபின் மெய்ன் வழக்குக்கும், காளிமுத்துவுக்கும் தொடர்பு இருப்பதாகக் கருதி, ஸி. பி. ஐ. தீவிரமாக விசாரணை நடத்திக் கொண்டிருக்கிறது என்பதற்குக் காளிமுத்துவே தந்த ஒப்புதல் வாக்கு மூலம் ஆகிறது.

ராஜீவ் காந்தி பதவிக்கு வந்த பிறகு அதிகார துஷ்பிரயோகம், லஞ்ச ஊழல், மோசடி, வரி ஏய்ப்பு போன்றவை மீது தீவிரமாகப் போர் தொடுத்து வருகிறார். இதையொட்டி ராபின் மெய்ன் விவகாரத்திலும் ஸி. பி. ஐ. தீவிர கவனம் செலுத்துவதில் வியப்பொன்றுமில்லை. விசாரணை நடத்துகையில், உண்மையை வரவழைப்பதற்காக, மிரட்டலாக, 'அடுத்த முதல்வர் ஜெயலலிதாதான்; என்ன சொல்கிறாய்?' என்று அமைச்சரின் உதவியாளரிடம் கேட்கப்பட்டிருந்தால் அதிலும் ஆச்சர்யமில்லை. விசாரணை என்று வரும்போது இப்படியெல்லாம் அதிகாரிகள் பேசுவது இயல்பு.

ஆனால் காளிமுத்துவின் ஓவர் ரியாக்ஷன்' தான் அவர் ராபின் மெய்னுக்கு உதவ அதிகார துஷ்பிரயோகம் செய்திருக்கிறார் என்ற குற்றச்சாட்டு வலுப் பெற வாய்ப்பளிக்கிறது. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கிறதோ என்று எண்ண இடம் தருகிறது.

இல்லாதலாரிகளுக்குப் போலி ஆர். ஸி க்களைக் காட்டி ராபின் மெய்ன் கடன் பெற்று ஏமாற்றிவிட்டார்' என்று வாக்குமூலம் தந்திருக்கிறார் கார்ப்பரேஷன் வங்கி அதிகாரி. அரசு ஆணை மீது நடக்கும் லோன் மேளாக்களை ஒதுக்கி விட்டுப் பார்ப்போமானால் பொதுவாக வங்கிகளிடமிருந்து தகுதி உடையவர்கள் கூடக் கடன் பெறுவதென்பது எவ்வளவு கடினம் என்பது தெரிய வரும். எத்தனையோ விதி முறைகள், முன்னெச்சரிக்கைகள். அவ்வாறிருக்க ராபின் மெய்ன் போன்ற ஒருவர் வெகு சுலபமாக வங்கிகளை ஏமாற்றிப் பெருந் தொகைகளைக் கடன் பெற முடிந்ததென்றால் அது அரசியல் மேலிடத்துச் சிபாரிசு இன்றி நடந்திருக்குமா என்ற கேள்வி எழுகிறது. அரசு இலாக்காவின் டெபாஸிட் கிடைக்கும் என்ற ஆசையினால், அதற்குப் பிரதியான வெகுமதியாகத்தானே ராபின் மெய்னுக்கு அவர் கடன் பெறத் தகுதி உள்ளவர்தானா என்பதைக் கூடச் சரியாக ஆராயாமல் ஏராளமாய்க் கடன் தரப்பட்டுள்ளது? (இதிலிருந்து எந்த வழியைக் கையாண்டேனும் எப்படியாவது டெபாஸிட்களை அதிகரித்துக் கொள்ள வேண்டும் என்ற வங்கிகளின் மனப்பான்மையும் கண்டனத்துக்குரியதாகிறது.)

நிலைமை இந்த அளவுக்கு வளர்ந்துவிட்ட பிறகு, பாங்குகள் ராபின் மெய்னுக்குக் கடன் தந்தது பாங்குகள் விவகாரம் என்றும் அரசு இலாக்கா பாங்குகளில் டெபாஸிட்கள் செய்தது அரசு அதிகாரிகள் விவகாரம் என்றும் ஒழுங்கீனம் ஏதும் நடக்கவே இல்லை என்றும் காளிமுத்து கூறிக் கொண்டிருப்பது முழுப் பூசணிக்காய் விவகாரத்தையே நினைவூட்டுகிறது. அமைச்சர் உடனடியாக ராஜினமா சமர்ப்பித்து விட்டுத் தம்மீது குற்றமேதுமில்லை என்று நிரூபணமான பிறகு மீண்டும் பதவிக்கு வர முனைவதுதான் ஜனநாயக தர்மம்.

> தமிழ்த்திரு நாட்டைத் தன்னைப் பெற்ற
> தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.

* எம். கல்யாணசுந்தரம், திருநரையூர்.

? 'நாங்கள் நினைத்தால் அ. இ. அ. தி. மு. க. ஆட்சியைத் தூக்கி எறிவோம்' எனச் சில இ. காங்கிரஸ் தலைவர்கள் பேசி வருகிறார்களே...?

! அவர்கள் இன்னமும் தாயின் காலத்திலேயே இருக்கிறார்கள்; பிள்ளையின் காலத்துக்கு வர மறுக்கிறார்கள் என்று புரிகிறது.

* வலங்கை ஜி. ராஜசேகர், வளையமாபுரம்.

? எம். ஜி. ஆரிடம் உள்ள எந்தத் திறமை கருணாநிதியிடம் இல்லை?

! ஓட்டு வாங்கும் கவர்ச்சி!

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? நரகாசுரன் இன்றிருந்தால்...?

! தீபாவளி செலவு மிச்சமாகும்.

* கவி. கண்ணன், போடிநாயக்கனூர்.

? சோவின் பதில்கள் — சாவியின் பதில்கள் ஒப்பிடுங்களேன்?

! முன்னவருக்கு அரசியலைக் கிண்டலாகச் சொல்வது கை வந்த கலை என்றால் பின்னவருக்கு அனுபவங்களைக் கிண்டலாகச் சொல்வது கைவந்த கலை.

* பா. கிருஷ்ணதாஸ், கும்பகோணம் — 1.

? தமிழக அமைச்சர்களுள் துணிச்சல் மிக்கவர் யார்?

! ப. உ. ச. தான்! தர்மம், நியாயம், நேர்மை, உண்மை ஆகியவற்றுள் ஏதாவதொன்றுக்குப் பயப்படுபவரானால் கூட மறுபடியும் பஞ்சாயத்துத் தேர்தலை ஒத்திப் போடுவாரா?

* ஆர். இருதயராஜ், திருபுவனம்.

? யேசு, அல்லா, விஷ்ணு இவர்கள் மூவரும் உங்கள் எதிரில் தோன்றி ஆளுக்கு ஒரு வரம் தருவதாகக் கூறினால் என்னென்ன வரங்களைக் கேட்பீர்கள்?

! முதலில் மூவரையும் கைதொழுது வரவேற்பேன். பிறகு, ''வணக்கத்துக்குரியவர்களே, நீங்கள் மூவரும் இப்படி ஒரே இடத்தில் ஒற்றுமையாகத் தோன்றுவதுபோல் மக்களையும் ஒற்றுமையாக இருக்கச் செய்யுங்கள்; புண்ணியமாய்ப் போகும்!'' என்று வேண்டிக் கொள்வேன். இதை விடவும் சிறந்த வரம் ஏது?


* அனுபவக் கிண்டல்.


* அரசியல் கிண்டல்.


* பூஜ்யம். * முகவரி தெரியாது.

* கா. சேட்டு முகம்மது, விருத்தாசலம் — 1.

? தமிழக அமைச்சரவையில் எல்லா அமைச்சர்களின் பெயரும் தெரியுமா?

! அ. இ. அ. தி. மு. க. தாரர்களுக்கே தெரியாது ஸ்வாமி!

* ஹரணி சங்கர், சுத்தமல்லி.

? கூட்டத்தில் கூடிநின்று கூவிப் பிதற்றலன்றி நாட்டத்தில் கொள்ளாரடி — கிளியே நாளில் மறப்பாரடி! — பாரதியாரின் இந்த வரிகளை இன்றைய அரசியல் நிலையுடன் ஒப்பிட முடியுமா?

! அரசியல்வாதிகளுக்கு அந்தப் பாடல் வரிகள் என்றால் மக்களுக்கு,
கண்கள் இரண்டிருந்தும் காணும் திறமையற்ற பெண்களின் கூட்டமடி—கிளியே பேசிப் பயன் என்னடி! — என்ற வரிகளும் பொருத்தமாகத்தான் இருக்கும்.

* ஆர். நாகராஜன், செம்பனார்கோவில்.

? ஒரு பத்திரிகை நடத்துவதற்கும், ஒரு கட்சியை நிர்வகிப்பதற்கும் என்ன வேறுபாடு?

! கட்சியை நிர்வகிக்கும்போது யாரும் விளம்பரத்தை 'கட்' பண்ண முடியாதே!

* சு. தாணுமாலயப் பெருமாள், இடலாக்குடி.

? குடும்பக் கட்டுப்பாட்டைப் பற்றி எடுத்துக் கூறுபவர்களிடம், 'மவராசன் எம். ஜி. ஆரு சத்துணவு போட்டு வளர்க்கிறப்போ, நாங்க எத்தனை குழந்தைங்களைப் பெத்தா உங்களுக்கென்ன கவலே?' என்று பதிலடி கொடுக்கும் தாய்க்குலங்களைப் பற்றிய தங்கள் கருத்து?

! ஜனநாயகமும் இல்லாமல், சோஷலிஸமும் இல்லாமல் ஓட்டுக்காக ஒரு குழப்பமான கொள்கையைக் கூறிக் கொண்டு, தனிமனிதக் கடமைகளில் தலையிடுவதால் ஏற்படும் மாபெரும் குழப்பம் இது. இப்போதைய பிரிட்டிஷ் பிரதமர் மார்க்கரெட் தாட்சர் முன்பு கல்வியமைச்சராக இருந்த போது, அப்போது பள்ளிக் குழந்தைகளுக்கு இலவசமாகக் கொடுக்கப்பட்ட பாலை முதலில் நிறுத்

றனர். குழந்தைகளுக்குப் பாலூட்டுவது பெற்றோர் கடமை என்றார். அந்தப் பணத்தைக் கொண்டு, அதே குழந்தைகளுக்குத் தேவையான அறிவியல் உபகரணங்கள், புத்தகங்கள் ஆகியவற்றைப் பள்ளிகளில் வாங்கி வைப்பதுதான் அந்தக் குழந்தைகளுக்கு அரசு செய்யும் உண்மையான சேவை என்றார். இதையெல்லாம் நாம் எடுத்துச் சொன்னால், இங்கே நம்மைத்தான் 'ஏழைகளின் எதிரி' என்று குற்றம் சாட்டுவார்கள்!

*** எம். இராசன், கிருஷ்ணகிரி—1.**

**? 'அனுதாபம்' என்ற சொல்லுடன் 'அலை' என்ற சொல் இணைவதால் ஏற்படும் லாபம் என்ன?**

! 'ஆட்சி' என்ற லாபம் பெற்றவர்களைக் கண் முன்னாலேயே கண்டு கொண்டிருக்கிறோமே!

*** அருண், ஈரோடு—3.**

**? பயங்கரப் பேய்க் கதை கல்கியில் வெளி வருமா?**

! லஞ்ச-ஊழல் பேய், ஜாதிப் பிசாசு, சாராயக் காட்டேறி போன்ற பேய்க் கதைகள் வாராவாரம் வெளிவந்து கொண்டு தானே இருக்கின்றன. கவர் ஸ்டோரிகளையும், ஸ்பெஷல் ரிப்போர்ட்களையும் நீங்கள் படிப்பதில்லையா, என்ன?



* துணிச்சல்.



* வெளிநாட்டு விஜயம்.

*** சி. சுப்பு, தேரழுந்தூர்.**

**? பாக்யராஜ் பற்றிய பேச்சு இப்போது அதிகம் அடிபடுவதில்லையே, ஏன்?**

! இப்போது அவர் சின்ன வீட்டில் பிஸியாக இருப்பதுதான் காரணம்.

*** மு. கல்யாணசுந்தரம், மேட்டுப்பாளையம்.**

**? உங்கள் கணக்குப்படி அ. இ. அ. தி. மு. க. வில் எத்தனை கோஷ்டிகள் இருக்கும்?**

! தலைக்கு ஒன்று என்பதுபோல் காணப்பட்டாலும் இலைக்கு ஒன்று என்பதுதான் உண்மை.

*** பி. கலியமூர்த்தி, தென்பாதி.**

**? காதலித்தால்தான் கவிதை எழுத வரும் என்பது உண்மையா?**

! நூற்றுக்கு நூறு. முதலில் இயற்கையைக் காதலிக்கத் தெரிய வேண்டும்; அப்போது தான் தேசத்தைக் காதலிக்க முடியும். தேசத்தைக் காதலிக்கும் ஒருவனால்தான் வாழ்க்கையைக் காதலிக்க முடியும். வாழ்க்கையைக் காதலித்தால்தான் ஒரு பெண்ணைக் காதலிக்க முடியும். இவையெல்லாம் இல்லாத ஒருத்தனால் எப்படிக் கவிதை எழுத முடியும்? முடியவே முடியாது.

# தமிழக அமைச்சர்களுள் துணிச்சல் மிக்கவர் யார்?

*** ஆர். அரிகோபி, குடியாத்தம்.**

**? முதல்வர் காவல் நிலையங்களில் திடீர்ச் சோதனை நடத்தியது குறித்து?**

! அமைச்சர் காளிமுத்துவின் சமீபத்திய அறிக்கைக்கும் அதற்கும் கொஞ்சம் கூடத் தொடர்பு இல்லை என்றே நம்புகிறோம்.

*** எஸ். ஆரோன் பாபு, திருச்சி—17.**

**? 'எம். ஜி. ஆர். இல்லாவிட்டால் நம் முகவரி, தபால்காரனுக்குக் கூடத் தெரியாது!' என்று ஜெயலலிதா கூறியுள்ளாரே?**

! திருநாவுக்கரசு தங்களையெல்லாம் பூஜ்ஜியங்கள் என்று சொல்லிக் கொள்கிறார். ஜெயலலிதா முகவரி தெரியாதவர்கள் என்கிறார். ஆக இப்படிப்பட்ட சூனியங்கள் நிறைந்த கட்சியிடம்தான் தமிழக மக்கள் ஆட்சிப் பொறுப்பைக் கொடுத்திருக்கிறார்களா? உண்மையிலேயே தமிழக மக்கள் பரிதாபத்திற்குரியவர்கள்தான்.

*** எஸ். குமார், வேதாரண்யம்.**

**? ராஜீவ்காந்தி அடிக்கடி மேற்கொள்ளும் வெளிநாட்டு விஜயம் குறித்து?**

! உண்மையிலேயே பாரதத்தின் அரசியல் பெருமையை உலக அரங்கில் உயர்த்தும் விஜயங்களாகத்தான் இருக்கின்றன. அந்த அளவில் நாம் அவரை மனமாரப் பாராட்டுகிறோம்.

---

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
க. தாணுமாலயப் பெருமாள்,
2/13, குளத்தூர்,
இடலாக்குடி—629 051.
கன்னியாகுமரி மாவட்டம்.

## 14. அற்புதத்தை விழுங்கும் இனிமை!

> கனிவண் டெங்கும் கலந்தாற் போல்
> கமழ்பூங் குழல்கள் தடந்தோள் மேல்
> மிளிர நின்று விளையாட
> விருந்தா வனத்தே கண்டோமே!
>
> — ஆண்டாள்

மனித உடல் என்பது ஐம்பூதங்களால் ஆனது. ஐம்புலன்களையும் சார்ந்தது. இவ்வுடலுக்கு உண்டாகும் ஊறுகளை நீக்குவதில் ஸ்வாமியின் வல்லமைக்கு எல்லையே இல்லை. ஸ்வாமியின் அற்புத சக்தி மிகவும் அதிகமாகப் பேசப்படுவதே நோய்களை நீக்குவதில் தானே? ஈராயிரம் ஆண்டுமுன் இயேசுநாதன் மக்களின் உடற்பிணியை குணமாக்குவதற்காக அத்புதம்பலபுரிந்துமெல்லமெல்ல உள்ளத்துப் பிணிகளின் பிணிப்பிலிருந்து விமோசனம் தந்தார். அவ்வாறே இன்று ஸ்ரீஸத்ய ஸாயி நாதன் செய்து வருகிறார். பல்லாயிரக்கணக்காக விரியும் இந்த அத்புத மருத்துவத்தில் விநோத லீலையம்சம் விசேஷமாகக் கொழிக்கும் ஸாம்பிள் ''துளிப் போற''ப் பார்ப்போம்.



ரா. கணபதி

சில ஆண்டுகளுக்குமுன்வரையில்ஸ்வாமி வருஷம் தோறும் கோடை காலத்தில் அகில இந்திய ('அகில உலக' என்று கூடச் சொல்லலாம்) ரீதியில் கல்லூரி மாணவர்களுக்கென மிக மிகப் பயனுள்ள ஆன்மிய — கலாசாரப் பயிற்சி முகாம் நடத்தி வந்தாரல்லவா? அவற்றிலொன்றில் டாக்டர் ஏ. பாப்பி ராஜு தலைமையில் சில வைத்யர்கள் மருத்துவப் பணி புரிந்தார்கள். ஒரிஸ்ஸாவிலிருந்து வந்திருந்த இரட்டையர்களான இரு மாணவர்கள் வைத்ய கோஷ்டிக்குப் புரிபடாத ஒரு காய்ச்சலில் விழுந்தனர். தினமும் காலை எட்டு மணிக்கு 106 டிகிரியும், மாலையில் ஒரே ஒரு டிகிரி இறங்கி 105—மாக அவர்கள் எட்டு நீண்ட நாட்கள் தாபஜ்வரத்தில் வறுபட்டனர். எத்தனை சோதனை செய்தும், எத்தனை விதமாய் மருந்துகளை மாற்றியும்— அது என்ன நோய் என்று நிர்ணயிக்க முடியாமல் டாக்டர்கள் மண்டையைக் குடைந்து கொண்டும், கையைப் பிசைந்து கொண்டும் இருந்த போது, நமது வைத்யநாதர் அப்பசங்களைப் பார்க்க வந்தார். டாக்டர்களை ஏகமாகக் கேலி செய்தார். ''பெரிய பெரிய டிக்ரி போட்டுக் கொண்டு இத்தனை டாக்டருங்க இருக்கீங்க. எட்டு நாளா ஒரு டிக்ரி கூட

ஜ்வரத்தை இறக்கறதுக்கு முடியலே, ம்?'' என்றார். ''டைபாய்டுக்கு ட்ரீட் பண்ணுங்க. பாய்ஸ் நல்லா ஆயிடுவாங்க'' என்று அவர்களுக்குத் தூக்கிவாரிப் போடும்படியாக உத்தரவிட்டார்.

தூக்கிவாரிப் போடுவானேன் என்றால், அந்த டாக்டர்கள் நோயைப் பற்றி நிச்சயமாகச் செய்திருந்த ஒரே ஒரு முடிவு என்னவெனில் அது டைபாயிட் அல்ல என்பது தான்!

தங்களது வைத்ய சாஸ்திரப்படித் தீர்மானமாக இல்லாத ஒரு நோய்க்கா சிகித்ஸை தருவது என்று அவர்கள் முதலில் குழம்பத்தான் செய்தனர். ஆயினும் மருத்துவத்துக்கு மேம்பட்ட ஸாயி மஹத்துவம் அறிந்தவர்களாதலின் இல்லாத நோய்க்கு மருந்து கொடுக்கலாயினர்.

அப்புறம் என்ன? சொல்லவும் வேண்டுமா? பள்ளிப் படிப்புக் கூட முடிக்காதவரின் வார்த்தைப்படி ''பெரிய பெரிய டிக்ரி போட்டுக் கொண்ட அத்தனை டாக்டருங்க'' மருந்து கொடுத்ததில் மறுதினம் மாலையே நோய் 105 டிக்ரியிலிருந்து நார்மலுக்கு வந்து குணமாகிவிட்டது!

❖ விமானம் மேலே மேலே செல்வது போலவே விமானப் படையில் மேலே மேலே ப்ரமோஷன் பெற்று விரைவிலே ஸ்க்வாட்ரன் லீடரானவர் ஏ. சக்ரவர்த்தி. அவருக்கு அடித்த அத்ருஷ்டத்தையெல்லாம் அடித்துக் கொண்டு போவது போலத் திடுமென ஒரு கொடுமை வந்துற்றது. அவரது மனைவிக்குக் கருப்பையில் ஒரு நோய் ஏற்பட்டது. தொற்று நோயான அது சக்ரவர்த்தியையும் தாக்கியது. அது தீர்கிற வாய்ப்பே இல்லை என்றும், அப்படியே தீர்ந்தாலுங்கூட தம்பதியருக்கு நிச்சயம் பிள்ளைப் பேறு வாய்க்காது என்றும் ஸ்பெஷலிஸ்ட்கள் கைவிட்டு விட்டார்கள்.

கைவிடாமல் காப்பதற்கு 'ஸ்பெஷலைஸ்' பண்ணியுள்ள ஸாயியிடம் வந்தார் சக்ரவர்த்தி, மனைவியின்றித் தாம் மட்டுமே. அவரிடம் ஸாயி, ''இரண்டு கையையும் சேர்த்துக் கிண்ணம் போல் பிடி'' என்றார். அவர் அவ்விதமே செய்தார். அந்தக் ''கிண்ணத்''தின் மேல் விடாக் காப்புக் கரம் விளையாட்டாக அசைந்தது. ''கிண்ணம்'' நிறைய விபூதி நிரம்பிற்று. ''பூராவையும் தின்னு'' என்றார் ''கைகாரர்.'' சக்ரவர்த்தி தின்றார். அது ஸாதாரணத் திருநீறுகவா இருந்தது! மணமான மணமாக, ருசியான ருசியாக இருந்தது! மறுதினமும் இதேபோல் ஒரு கிண்ணம் விபூதி — ட்ரீட்மெண்ட் அளித்தார் லீலாவிபூதி லோலர்.

ஊருக்குத் திரும்பிய சக்ரவர்த்தியைவிட்டு நோய் ஓட்டம் பிடித்திருந்தது! அது மட்டுமில்லை; இவருடன் பர்த்தி செல்லாத மனைவியும் பூர்ண குணமாகியிருந்தார்!

குறத்தி பிள்ளை பெற்றதற்குக் குறவன் மருந்து சாப்பிட்டதாக வசனமுண்டு. சக்ரவர்த்தி விபூதி உண்டதில் ''சக்ரவர்த்தினி'' யும் வியாதி நிவாரணம் பெற்றதோடு நிற்கவில்லை. அவர் தாய்மையும்எய்துவார்என்றார் ஸ்வாமி, மறு மாதம் இவர்கள் அவரிடம் தம்பதியராகச் சென்ற போது. ''வருகிற (அதாவது 1962) நவம்பரில் பிள்ளை பிறக்கும்'' என்றார்.

''வியாதி தீர்ந்த போதிலும் புத்ர பாக்யம் அவளுக்கு ஏற்பட முடியாதென்றே நாலு பெரிய டாக்டர்கள் கூறியிருப்பதாக சக்ரவர்த்தி ஸ்வாமியிடம் தெரிவித்தார்.

ஸ்வாமி சக்ரவர்த்தியின் கண்களை நேர நோக்கினார். அம்ருத வீக்ஷணத்தோடு தமது இடக்கை ஆள்காட்டி விரலின் குறுக்கே வலக்கை ஆள்காட்டி விரலை வைத்து, ''ஸ்வாமி ஒண்ணு ஸங்கல்பம் பண்ணியாச்சுன்னா அது கண்டிப்பா ஸித்தியாயிடும், தெரிஞ்சுக்கோ'' என்றார்.

ஒரிஸ்ஸா இரட்டையருக்கு புதிர் நோய் குணமானது டைபாய்டுக்கான சிகித்ஸையாலல்ல. சக்ரவர்த்தி தம்பதியர்க்கு ரோகம் தீர்ந்தது விபூதியாலல்ல. அந்த சிகித்ஸைக்கும் இந்த விபூதிக்கும் ஆதாரமான ஸாயி ஸங்கல்பம்தான் வியாதி தீர்ப்பது — இன்னம் அவர் புரியும் அனைத்தையும் ஸாதிப்பது அந்தஸங்கல்பம்தான்.

நவம்பரில் குழந்தை பிறக்க வேண்டுமென்றால் ஜூனில் ''சக்ரவர்த்தினி'' ஐந்து மாதம் கருவுற்றிருந்தால்தானே முடியும்? ஆனால் அப்போது அவளைப் பரிசோதித்த டாக்டரோ அதற்கான 'ஸிம்ப்டம்' எதுவுமில்லை என்று உதட்டைப் பிதுக்கிவிட்டார்.

ஸ்வாமி அப்படியும் தம்பதியரிடம் தாம் சொன்னதையே வலியுறுத்தினார். நவம்பர் என்று மட்டும் முன்பு சொன்னவர், இப்போது நவம்பர் 23 ந் தேதி பிள்ளை பிறப்பானென்றார். ஆம், அவரது ஜயந்தி நன்னாளன்றுதான்!

ஸ்வாமி இப்படிச் சொன்ன இரவே அம்மாள் தன் வயிற்றிலே ஓர் உயிர் புரள்வதை நன்றாய் உணர்ந்தார். டாக்டரிடம் சென்றார். டாக்டர் ஆச்சர்யப்படுவது தவிர என்ன செய்வார்?

ஆனால் நவம்பர் 23 அன்று அம்மாளுக்குப் பேற்று நோவே அடியோடு இல்லை. ஆயினும் ஸ்வாமியின் ஸங்கல்பத்தை ஐயுறாமல் மருத்துவமனைக்குச் சென்றாள். ''இன்னும் சில தினங்களுக்கு டெலிவரி இருக்காது'' என்றனர் டாக்டர்கள். ஒரு நர்ஸ் மட்டும், ''பாபா சொன்னாரென்றால் நிச்சயம் அந்தப்படி நடக்கும். நான் அவருடைய பக்தை இல்லாவிட்டாலும், அவர் பெருமையைப் பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்'' என்று சொல்லி, ப்ரஸவ ஏற்பாடுகளைச் செய்யலானாள்.

கல்பதருவின் ஸங்கல்பப்படியே ஆயிற்று. ஸ்வாமியின் 37 வது ஜயந்தியன்று 'சக்ரவர்த்தினி'க்கு "ஆண் ப்ரஜை சுப ஜனனம்!"

ஸங்கல்பம் செய்தவரே நாமகரணமும் செய்தார் — க்ருஷ்ண கிசோர் என்று.

❖ எத்தனை அழகுக் குழந்தையாக ஸ்வாமி அப்போது விளையாடினார்? எப்போது? ஒரு மாணவனுடைய மூக்குக் கண்ணாடியைக் கேட்டு வாங்கித் தாமே அணிந்த அப்போது தான்! அவன் நாளுக்கு நாள் பார்வை நலிந்து

# கல்கி

தீபாவளியின் புனிதம், வண்ணங்கள், மகிழ்ச்சி அனைத்தையும் பிரதிபலிக்கும் விதமாக......

ஆன்மீக, அறிவியல், அரசியல் கட்டுரைகள்; அற்புத வண்ணப் புகைப் படங்கள், ஓவியங்கள்; சிறுகதைகள், கவிதைகள், நகைச்சுவை அம்சங்கள்— அனைத்தையும் உள்ளடக்கிப் பிரமாதமான முறையில் உருவாகி வருகிறது.

உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள். அல்லது 'கல்கி' காரியாலயத்திற்கு எழுதுங்கள்.

தனிப்பிரதி விலை ரூ. 25. பதிவுத் தபாலில் பெற ரூ. 4/— சேர்த்து அனுப்ப வேண்டும். வெளிநாட்டு சந்தாதாரர் கப்பல் தபாலில் பெற ரூ. 50/— அனுப்ப வேண்டும்.

மானேஜர், கல்கி, சென்னை—32.

## தீபாவளி மலர் 1985

மைனஸ் பதினெட்டுக் கண்ணாடிக்குப் போய் விட்டான். அந்தக் கண்ணாடிதான் ஸ்வாமியால் கேட்டு வாங்கி அணியப்படும் அத்ருஷ்டம் பெற்றது. அத்ருஷ்டமேதான்! "அ-த்ருஷ்டம்" என்றால் "பார்க்கப்படாதது." ஸ்வாமி கண்ணாடியை மறுபடி மாணவனிடம் கொடுத்தார். அவன் அதைப் போட்டுக் கொண்டு பார்த்தால்... எதுவும் தெரியவில்லை! அ—த்ருஷ்டம்தான்! மைனஸ் பதினெட்டை ப்ளஸ் செய்து அவன் பார்வையை குணப்படுத்தி விட்டார் திருவிளையாடலர்!

* இருபதாண்டுகளுக்கு முற்பட்ட பேரற்புதமாக ஸாயி பக்தர்கள் அறிந்த ஒன்று உண்டு. அமெரிக்காவில் விமான ஓட்டுனர் சார்லஸ் பென், புயலிலே அகப்பட்டுக் கொண்டு தவித்த போது, அவருடைய அந்த காக்—பிட்டிலேயே ஸ்வாமி ஸாக்ஷாத்தாக நின்று, விமானத்தை இப்படியிப்படி ஏற்றி, இறக்கி, வளைத்து ஓட்டச் சொல்லி டைரக்ஷன் கொடுத்து அதை பத்ரமாக 'லாண்ட்' செய்ய வைத்த அற்புதந்தான். அது அற்புதமாகவே மலைப்பான ஒன்றாயிருப்பது! அதிலே விளையாட்டு அம்சமில்லை. எனவேதான் போலும், அமெரிக்க விமானப் படை, "நாஸா" முதலியவற்றின் ஆலோசகராக இருந்த அல் ட்ரக்கரின் விமானத்தைச் சில ஆண்டு முன்பு காலிஃபோர்னியாவின் ஸியெர்ரா நிவாடா மலைப் பகுதியில் ஒரு பயங்கரப் புயலிலே ஸ்வாமி காத்த போது அதில் ஸ்தூல தர்சனத்தை ஒளித்து ஸூக்ஷ்மமாய் விளையாடினார்.

பன்னிரண்டாயிரம் அடி உயரத்தில் பலத்த சூறாவளியில் சிக்குண்டு சிதைய இருந்தது ட்ரக்கரின் விமானம். அபாயம் கூறி, அபயம் கோரி அவர் ரேடியோ மூலம் விடுத்த "மேடே" விண்ணப்பங்கள் விண்ணை விட்டு நகரவில்லை! வெளித் தொடர்பு முற்றும் துண்டித்துப் போன பேராபத்து நிலையில் அவர் ஸர்வசக்தனை ஆண்டவனைக் கூவி அழைத்தார். ஸத்ய ஸாயி என்ற பெயரையே அப்போது அவர் அறிந்திருக்கவில்லை என்பதும், கடவுள் என்னும் ஒருவனுக்கே முறையிட்டாரென்பதும் கவனத்துக்குரியன.

உடனே ரேடியோவில் குரல் கேட்டது. குரலிலே குழல் போன்ற இனிமை, தெளிவு இவற்றைவிட அன்பும், அக்கறையும் ததும்பின. "கான் யு ஹியர் மி?" என்று பட்டுக் குரல் இழைய, ட்ரக்கர் கண்ணீரில் வெடித்தார். "விமானத்தை 60 டிக்ரி வலது பக்கம் திருப்பி அப்புறம் இடது பக்கம் ஒடித்துக் கொண்டாயானால் உன்னை அடையாளம் தெரிந்து கொள்வேன். டோன்ட் ஒர்ரி. நான் 'கய்ட்' பண்ணி ஸேஃப் லான்டிங் பண்ண வைக்கிறேன்" என்றது அன்புக் குரல்.

வாசகர்கள் ஊஹித்துவிடுவார்கள். — புட்டபர்த்திவாஸனைத் தெரிந்து கொண்டு, எங்கெங்கும் வாஸம் செய்யும் நம் கதாநாதர் தான் குரல் கொடுத்தது என்றும், — அவர் நிச்சயம் ட்ரக்கரை ஸேஃப்—லாண்ட் பண்ணுவித்திருப்பார் என்றும். ஊஹம் முற்றிலும் ஸரியானதே.

அதிருக்கட்டும், தமது அடையாளத்தையே அப்போது அவர் தெரிவித்துக் கொள்ளாமல் ரேடியோவில் பேசுவானேன்? (பல ஆண்டுகள் பிறகுதான், தம்மைக் காத்தது ஸத்ய ஸாயி என்பவரென்று ட்ரக்கர் அறிந்தார்!) அதுமட்டுமின்றி, அபயக் குரல் கேட்டு ரக்ஷிக்க வந்த ஆபத் பாந்தவர் ட்ரக்கரைத் தாம் அடையாளம் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காக விமானத்தை 60 டிக்ரி திருப்பச் சொன்ன குறும்பு என்ன?

வேறு என்ன? 'அற்புத மலைப்பு விளையாட்டுக் களிப்பாக இளக வேண்டும்; அற்புதம் செய்யும் மலையான தன்னை உலகம் அன்பு பொழியும் மழையாகக் கண்டு அதிலே குளிர வேண்டும்' என்ற அவரது மதுர மனச் சிறப்புத்தான்!

(தொடரும்)



எம். ஜி. ஆர். ஆட்சி சாராய வியாபாரிகள், லஞ்ச — ஊழல், ரவுடியிஸ ஆட்சியாக மாறி விட்டது. கல்வித் துறையைத் தனியாருக்குக் கொடுத்துவிட்டுச் சாராய வியாபாரத்தை அரசுடைமை ஆக்கிவிட்டார் எம். ஜி. ஆர். இதுதான் அண்ணாயிஸமா?.

— கல்யாண சுந்தரம்.

ராவணன் தங்கை சூர்ப்பனகை, ராமனைக் காதலித்தாள். ராமனை அடைய வேண்டும் என்று ஆசை கொண்டாள்; மயக்க நினைத்தாள். கடைசியில் தம்பி லட்சுமணனால் மூக்கறுபட்டாள். அதுபோல ராமபிரானின் உண்மையான தம்பி லட்சுமணனாக ஆர். எம். வீ. இருக்கிறார். ஆயிரம் சூர்ப்பனகைகள் வந்தாலும் மூக்கறுப்போம்.

— தமிழ்மணி எம். எல். ஏ.

நாங்களெல்லாம் மைசூர் மகாராஜாவின் பேரன்கள் அல்ல. காங்கிரஸ்காரர்களைப் போலச் சிறை சென்ற தியாகிகளும் கிடையாது. அனுபவம் மிக்க அரசியல்வாதிகளும் கிடையாது.

—அமைச்சர் திருநாவுக்கரசு.

போலீஸ் நிலையங்கள் முறையாக நடக்கின்றனவா என்று பார்ப்பதற்காகப் போலீஸ் ஸ்டேஷனுக்கே செல்லும் முதலமைச்சர், நாளைக்கு தியாகராய நகர் மார்க்கெட்டில் கத்தரிக்காய் விலை அதிகம் விற்கிறது என்று ஒருவர் புகார் செய்தால் உடனே மார்க்கெட்டுக்கே வந்து விசாரிப்பாரா?

— அன்பழகன்.



# ங்கள் விருப்பம்போல் தேர்ந்தெடுத்து அணிந்து மகிழுங்கள்

மஃபத்லால் ஷர்டிங்ஸ். வித விதமான ப்ளெயின் துணிகள். நவீன ப்ரின்டுகளும் உண்டு. பருத்தித் துணிகள். பாலியஸ்டர் ப்ளெண்டுகளும் உண்டு. மென்மையானது. அழகிய டிசைன்கள் கண்கவர் வண்ணங்களில் பெறுங்கள்.

நீங்கள் விரும்பியதைத் தேர்ந்தெடுத்து அணியுங்கள். பார்ப்பவர் வியப்பதைக் காணுங்கள்.

வாருங்கள்! உங்கள் அருகிலுள்ள மஃபத்லால் ஃபேப்ரிக்ஸ் அங்கீகாரம் பெற்ற ரீடெய்ல் மற்றும் இதர கடைகளில் எமது மிக நவீன டிசைன்களைக் காணுங்கள், தேர்ந்தெடுங்கள்.

மஃபத்லால்

— நம்பிக்கைக்குப் பெயர் பெற்றது

மஃபத்லால்
ஃபேப்ரிக்ஸ்



®

மஃபத்லால் இண்டஸ்ட்ரீஸ் லிட் (நியூ ஷொர்ராக் மில்ஸ்) மற்றும் மஃபத்லால் ஃபைன்



கராத்தே, காதல், பாசம், கண்ணீர் போன்ற காரம், குணம், மணம் கொண்டது அவன் — என்று விளம்பரம் செய்யலாம் போல் அத்தனை மசாலா சமாசாரங்களையும் திணித்திருக்கிறார்கள்.

ஹீரோ அர்ஜுன். சண்டை போடத் தெரிந்த போக்கிரி (போக்கிரி என்ற பதம் படத்தில் உபயோகிக்கப்படுவது) அவரைக் காதலிப்பதுபோலிச்சக்கரவர்த்தியின்(ஏகப் பட்டபணம்!)பெண் இளவரசி. ஹீரோவைச் சுற்றி இளவரசி. ஹீரோ மோட்டார் பைக் கால் கார் தாண்டுகிறார்; கராத்தே அடி அடிக்கிறார்; ஏழைகளுக்காக இதயத்தில் இருந்து கண்ணீர் வடிக்கிறார்; காதலிக்காகக் காலில் கத்திக் குத்து பெறுகிறார்; அடி உதைபட்டு மயங்கிவிழுந்தபின்பும்காதலிக்காகஎழுந்து ஓடி வருகிறார் (எங்கே கட்டு, எல்லாம் மாயமாகிவிட்டனவே!) ஏகப்பட்ட ஹிந்தி மசாலா நெடி.

சண்டைக்காட்சிகளில் அர்ஜுன் வேகம் காட்டுகிறார். ஹெல்மெட்டை வைத்து 'டொக்' 'டொக்' என்று கொட்டாங்கச்சி சத்தத்துடன் சண்டை போட்டாலும் திரைக்குப் புதுசு என்ற வகையில் தட்டிக் கொடுக்கலாம்.

இளவரசிக்கு வர வர பம்பளிமாஸ் போல முகம் ஆகிவிடுமோ என்ற நியாயமான கவலை இந்தப் படத்தைப் பார்ப்பவர்களுக்கு ஏற்பட வாய்ப்புகள் இருந்தாலும் பரவாயில்லை! அவரும் மையமாகக் கண்ணீர் சிந்திக் காதலித்து ஒப்பேற்றியிருக்கிறார்.

முதலில் ஜெய்சங்கரைச் சாகடித்துவிட்டு, அவருடைய சக்கரவர்த்தி என்னும் பெயரை இரவல் வாங்கிக் கொண்டு விஜுசக்ரவர்த்தி பெரிய மனிதராய் உலா வருவதும் செந்தாமரை கூட்டாளியும் அவர் மகன் நளினிகாந்தும் கூட இருந்து 'வியாபாரத்தை'க் கவனிப்பதும், அப்புறம் படிப்படியாய் அவர்களின் சுயரூபம், — ஜெய்சங்கரின் மீண்டும் ஒரிஜினல்சக்கரவர்த்திப்பிரவேசம், — ஹீரோ அர்ஜுனின் காரெக்டர் என்று திரைக்கதையைச் சீராக அமைத்திருப்பதற்காக டைரக்டர் சோழராஜனைப் பாராட்டலாம்.

இசை, சங்கர்—கணேஷ்; புகழ் பெற்ற இறக்குமதியாளர்கள்; இறக்கியிருக்கிறார்கள்! லூஸ் மோகனும் செந்திலும் நகைச்சுவை ஜோடி. தரையில் புரளும் வேட்டி. ஜிப்பா ஸன் புன்முறுவ வைக்கிறது.

அதெல்லாம் சரி, இன்னுமா அனுராதாவின் ஆட்டத்தை ரசிகர்கள் வரவேற்கிறார்கள்! காலாவதியாகிவிடவில்லை இந்த டான்ஸெல்லாம்?

—ஜெயமன்மதன்.

# சித்தரஞ்சனி

## 14. அசரீரி

கௌதமிபுத்ர சதகர்ணியைப் போர்வையைப் போர்த்திக் கயிறு கொண்டு மூட்டையாகக் கட்டிப் படகில் அனுப்பிவிட்டதால் பெரிய தொல்லையொன்று தீர்ந்துவிட்டதென்ற உற்சாகத்திலிருந்த நாகபாணன், சித்தரஞ்சனி மயக்கமுற்றுத் தன் கைகளில் சாய்ந்துவிட்டதைக் கண்டதும் ஒரு விநாடி அனுதாபத்தின் வசப்பட்டாலும், "போர்க்காலங்களில் இத்தகைய விபரீதங்கள் சகஜம்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். ஆகவே சற்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு சித்தரஞ்சனியைத் தனது இரு கைகளில் தாங்கிய வண்ணம் கோட்டை வீட்டை நோக்கி நடந்து அங்கிருந்த தோழிகளிடம் சித்தரஞ்சனியை ஒப்படைத்து அவளை கவனிக்குமாறும், அவளுக்குச் சுரணை வந்ததும் அவளுடைய தந்தையான க்ஷத்ரபனை விட்டு அவளுக்கு ஆறுதல் சொல்லச் செய்யுமாறும் பணித்தான்.

சித்தரஞ்சனியைத் தாங்கிப் பிடித்து அழைத்துக் கொண்டு அவளது அறைக்குச் சென்று அங்கிருந்த பஞ்சணையில் அவளைப் படுக்க வைத்த பணிப் பெண்களில் ஒருத்தி அவள் முகத்தில் குளிர்நீர் தெளிக்க, இன்னொருத்தி அருகில் உட்கார்ந்து தனது முந்தானையால் விசிறத் தொடங்கினாள். இந்தச் சைத்தியோபசாரங்களால் சிறிது நினைவு திரும்பிய சித்தரஞ்சனி ஒருமுறை அருகிலிருந்த பணிப் பெண்களை நோக்கித் திருதிருவென விழித்துவிட்டு, "படகு என்ன வாயிற்று?" என்று வினவினாள்.

"மரக்கலத்தை நோக்கிச் சென்றுவிட்டது. இன்னும் இரண்டு நாழிகைக்குள் மரக்கலத்தை அடைந்துவிடும்" என்றாள் ஒரு பணிப் பெண்.

"மரக்கலம் எப்போது புறப்படுமாம்?" என்று இன்னொரு கேள்வியையும் வீசினாள் சித்தரஞ்சனி.

"எங்களுக்குத் தெரியாது" என்று முந்தானையால் விசிறிய பணிப் பெண் சொன்னதன்றி, "அம்மணி! நீங்கள் மிகவும் பலவீனமாயிருக்கிறீர்கள். மீதி இரவை விழித்துக் கழிக்க வேண்டாம். சற்று உறங்குங்கள்" என்றும் கூறினாள்.

சித்தரஞ்சனி அவளுக்குப் பதிலேதும் சொல்லாமல் பஞ்சணையிலிருந்து எழுந்து சற்றுச் சமாளித்துக் கொண்டு, தட்டுத் தடுமாறிச் சாளரத்தை நோக்கி நடந்து அதன் மூலம் வெளியே நோக்கினாள். எதிரே தாபோல் மலைக்காடும், அதை ஒட்டி ஓடிய வாசிஷ்டி நதியும், அது கடலில் கலந்த முகத்துவாரமும் தெளிவாக அவள் கண்களுக்குத் தெரிந்தன. கடலில் எட்ட நின்று இரவில் காற்றில் ஆடிநின்ற மரக்கலம் ஓரளவு கண்ணுக்குப் புலப்பட்டாலும், மரக்கலப் பக்கப் பகுதிகள் நிலவிலும் திட்டமாகவோ தெளிவாகவோ, தெரியாவிட்டாலும், கௌதமிபுத்ரனைத் தாங்கிய படகு மட்டும் சிறிது தெரிந்ததன்றி, கப்பலிலிருந்து தொங்கவிடப்பட்ட இரு கயிறுகளில் பெரிய நீண்ட மூட்டையொன்று பிணிக்கப்பட்டு ஏற்றப்பட்டதும் புலனானதால் கண்ணைத் தனது இரு கைகளாலும் இறுக மூடிக் கொண்ட சித்தரஞ்சனி "சண்டிகாதேவி! நீதான் அவரைக் காப்பாற்ற வேண்டும்" என்று உள்ளூரப் பிரார்த்தனையும் செய்தாள். அடுத்து எதையோ நினைத்துக் கொண்டு அந்த அறையிலிருந்து வெளியேற முயன்று கதவை நோக்கி வேகமாகச் சென்றாள். வாயிற்படியில் கைகளைப் பக்கத்துக் கட்டைகளில் ஊன்றி அவள் தந்தை க்ஷத்ரபன் நின்று கொண்டிருந்தான். "எங்கே இவ்வளவு அவசரமாகப் போகிறாய்?" என்று சற்றுக் கடுமையாகவே விசாரித்தான்.

"மரக்கலத்துக்குப் போகப் போகிறேன்" என்றாள் சித்தரஞ்சனி தந்தையை அலட்சியமாக ஏறெடுத்து நோக்கி.

"யாரைப் பார்க்கவோ?" என்று சற்றுச் சினத்துடன் விசாரித்தான் க்ஷத்ரபன்.

"என் கணவரை" சித்தரஞ்சனி இதையும் மிக அலட்சியமாகச் சொன்னாள்.

"நான் உன் தந்தை" நினைப்பூட்டினான் க்ஷத்ரபன்.

"வளர்ப்புத் தந்தைதானே?"

"இருந்தாலென்ன?"

"பெற்ற பாசமிருக்காது. நீங்கள் அன்று என்னை வாசிஷ்டி நதி முகத்துவாரத்தில் அறைந்த பின்பு அதை நன்றாகவே உணர்ந்து கொண்டேன்."

"இப்பொழுதும் அந்த அறை கிடைக்காதென்பது என்ன நிச்சயம்?"

"கிடைக்கலாம். அதைப் பற்றிக் கவலையில்லை" என்று சித்தரஞ்சனி சொன்னதும் கையை ஓங்கிக் கொண்டு வந்த க்ஷத்ரபனை, "க்ஷத்ரபா! பெண்ணாயிருந்தாலும் வளர்ந்த பின்பு தொட்டு அடிக்கும் பழக்கம் தர்ம விரோதமானது" என்ற சொற்களைக் கேட்டுத்

திரும்பிய க்ஷத்ரபன் அச்சத்திற்குள்ளானான். பின்னால் நின்ற மகாக்ஷத்ரபனை நாகபாணன், ''க்ஷத்ரபா! பெண்களை அன்பினால் வளைக்க வேண்டும். அடியினால் முடியாது. சரி, நீ கிளம்பு'' என்றான்.

''எங்கு போக?'' என்று வினவினான் க்ஷத்ரபன்.

''மரக்கலம் புறப்படுமுன்பு கௌதமிபுத்ரனை ஒருமுறை பார்த்துப் பேசுவோம்'' என்றான் நாகபாணன்.

''பேசுவதற்குஎன்ன இருக்கிறது?'' வினவினான் க்ஷத்ரபன்.

''வா சொல்கிறேன்'' என்று அவனை அழைத்துக்கொண்டு வெளியே சென்ற நாகபாணன் வாயிற்படியில் சற்றே திரும்பி, ''சித்தரஞ்சனி! பொழுது விடிந்ததும் நீ சுதந்திரமாக எங்கு வேண்டுமானாலும் போகலாம். கௌதமிபுத்ரனுக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது. எதிரியானாலும் தைரியசாலி, வீரன். அவனுக்குத் தீங்கு எதுவும் விளைவிக்க நான் இஷ்டப்படவில்லை. ஆனால் இந்த இடத்திலிருந்து அவனை அகற்றுவிட்டால் இத்தனை நாட்கள் திட்டம் போட்டுத் தாபோல் மலைப் பகுதியிலிருந்த மக்களை விரட்டி நமது படைகள் இறங்கச் செய்த ஏற்பாடு தவிடு பொடியாகிவிடும். நமது நலனையும் சிந்தித்துப் பார்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

சித்தரஞ்சனியை இப்படிச் சமாதானப் படுத்திவிட்டு க்ஷத்ரபனை அழைத்துக்கொண்டு வெளியே வந்த நாகபாணன், ''க்ஷத்ரபா! மரக்கலத்துக்குப் போய் வந்ததும் நாளைக்கு உன்னிஷ்டப்படி காஷ்டானனுக்குச் சித்தரஞ்சனியை மணமுடித்து,கொடுத்து முடித்துவிடுகிறேன்.கவலைப்படாதே'' என்று கூறிவிட்டு, ''நீ போய் மரக்கலத்தில் கௌதமிபுத்ரனைச் சரியான காவலில் வைத்துவிட்டு வா. நான் பொழுது விடிந்ததும் வந்து அவனுடன் பேசிய பிறகு மரக்கலம் புறப்படட்டும்'' என்றான்.

''நீங்களும் வருவதாகச் சொன்னீர்களே?'' என்று கேட்டான் க்ஷத்ரபன்.

''இங்கு சில அலுவல்கள் இருக்கின்றன. அவற்றை முடித்துவிட்டு வருகிறேன்'' என்று நாகபாணன் சொல்லிவிட்டு, ''நீ புறப்படு! எதிரிக்கு எந்தவித தீங்கும் கூடாது. நினைவிருக்கட்டும்'' என்று எச்சரிக்கை செய்தும் அனுப்பினான்.

நாகபாணனுக்குத் தனது எதிரியிடம் ஏற்பட்ட கருணைக்குக் காரணம் புரியாமலும், அதைப் பற்றிக் கசந்து கொண்டும் க்ஷத்ரபன் புறப்பட்டான் வாசிஷ்டி நதியின் படகுத் துறையை நோக்கி. அங்கிருந்த படகொன்றை எடுத்துக்கொண்டு துடுப்புகளை வேகமாகத் துழாவி மரக்கலத்தை நோக்கிச் சென்றான்.

மகாக்ஷத்ரபரும் க்ஷத்ரபரும் சென்ற பிறகு தோழிகளை அனுப்பிவிட்டு மீண்டும் பஞ்சணையில் படுத்த சித்தரஞ்சனி தூக்கம் வராததாலும் துன்பம் நெஞ்சை அழுத்தியதாலும் படுக்கையில் புரண்டு புரண்டு படுத்தாள். விடிவதற்கு நாலைந்து நாழிகைகள் இருக்கும் பொழுது எழுந்திருந்து வாசிஷ்டி நதியை நோக்கிச் சென்றாள். அவளைத் தடை ஏதும் செய்ய வேண்டாமென்று நாகபாணன் உத்தரவிட்டிருந்ததால் யாரும் அவளைத் தடை செய்யவில்லை.நேராக நதிக்கரைக்குச் சென்ற சித்தரஞ்சனி நதியில் இறங்கி நீராடினாள். பிறகு அங்கிருந்த படகுக்காரன் ஒருவனை அழைத்துத் தன்னை எதிர்க்கரையில் விட்டுவிடும்படி பணிக்கவே அவன் மறுமொழி ஏதும்சொல்லாமல் படகை அவிழ்த்து அவள் ஏறியதும் துடுப்புகளைக் கொண்டு படகைத் துழாவி எதிர்கரைக்குச் செலுத்தினான். எதிர்க்கரையை அடைந்ததும் ஈரச் சேலையுடனேயே மலையில் ஏறிச் சென்ற சித்தரஞ்சனி நேராகச் சண்டிகையின் குகை இருப்பிடம் சென்றாள். அங்கிருந்த செடிகளிலிருந்த மலர்களில் இரண்டைத் தலையில் சொருகிக் கொண்டு இன்னும் சில மலர்களை எடுத்து மடியில் கட்டிக் கொண்டு பாறையை நகர்த்திக் குகைப் படிகளில் இறங்கிச் சென்றாள். சண்டிகையின் சந்நிதானத்தைஅடைந்ததும்அங்கு அம்மன் காலடியில் இருந்த குங்குமத்தை எடுத்து நெற்றியில் தீட்டிக் கொண்டு நன்றாக மண்டியிட்டுத் தலை தரையில் தொட வணங்கினாள். பிறகு மண்டியிட்ட நிலையிலேயே கண்களை இறுக மூடிக் கொண்டு சண்டிகையைத் துதித்தாள். தேவியின் தோத்திரங்களை மனத்திலேயே நீண்ட நேரம் ஸ்மரித்த பிறகு, ''தேவி! உன் முன்பு சாதவாகனருக்குத் திருமணமான என்னை வேறொருவனுக்கு மணமுடிக்க ஏற்பாடு நடக்கிறது. இது உன் திருவுளத்துக்குச் சம்மதந்தானா?'' என்று இறைந்து கேட்டாள்.

''தேவி! நீ பேசக்கூடியவள் என்று அவர் சொன்னாரே! ஏன் வாளாவிருக்கிறாய்? நீ கல்லானாலும் கடவுள்தானே. அநீதிகள் நடக்கும்போது நீ எப்படி வாயை மூடிக் கொண்டிருக்கலாம். பேசு தாயே'' என்று இரைந்து கேட்டாள் சித்தரஞ்சனி. அடுத்துப் பழைய அதே சித்தரஞ்சனியை மெதுவாக இசைக்கவும் தொடங்கினாள். அந்த இசையின் விளைவாகவோ என்னவோ திடீரென்று பெரும் காற்றொன்று எங்கிருந்தோ கிளம்பியது. அதன் வேகத்தால் குகையின் ஒரு பகுதி ஊழியின் பெரு ஊதல்போல் ஊதவும்

நீதிபதி: ''நீ குற்றவாளிதானே?''

கைதி: ''அவசரப்படாதீங்க மை லார்ட்! சாட்சி என்ன சொல்றார்னு கேட்போம்.''

—ராமு.



# இதோ எளிதில் உபயோகிக்கக்கூடிய ஒரு ஹேர்-டை, மிகமிகக் குறைந்த விலையில்!



கோத்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது.
இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது. ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்!
மிகமிக முக்கியம், நீங்கள் நம்பமுடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!



**கலப்பது சுலபம்**
இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப்போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**
இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள். தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடிமீது பரவி விடுகிறது. உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தைத் தருகிறது!

இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர்-டை இது ஒன்றே.




**Godrej**

**பவுடர் ஹேர்-டை கான்ஸெண்ட்ரேட்**

CLARIAN/GS/11/203 TAM

**தரமோ நீங்கள் நாடுவது விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

தொடங்கியது. திடீரென்று குகை வாயிலிருந்து புஷ்பங்கள் சில காற்றால் கொண்டு வரப்பட்டுப் படிகளிலும் சந்நிதி முன்பும் சிதறப்பட்டன.

இதனால் குகை வாயிலைத்தான் வழக்கப்படி மூடவில்லையென்பதை உணர்ந்த சித்தரஞ்சனி திரும்பி நோக்கினாள். வாயில் திறந்தது திறந்தபடியிருந்தாலும் அங்கு யாரும் காணவில்லை. இருப்பினும் அதைப் பற்றிக் கவலைப்படாத சித்தரஞ்சனி மீண்டும் தேவியை நோக்கிக் கண்களில் நீர் சுரக்க வேண்டினாள். "தேவி! அவரை மரக்கலத்திலிருந்து எப்படியாவது நீதான் தப்ப வைக்க வேண்டும். என்ன காரணமென்று எனக்கே புரியவில்லை. இத்தனை ஆபத்திலும் எனக்கு மனக்கலக்கம் ஏதுமில்லை. என் மனம் கல்லாகிவிட்டதா? அவர் துன்பத்தினால் ஏன் என் மனம் சலித்துச் சிதறவில்லை?" என்று ஏக்கம் நிறைந்த குரலில் வினவினாள்.

அந்தச் சமயத்தில் அசரீரியொன்று ஒலித்தது. "உன் கணவனுக்கு ஆபத்து ஏதுமில்லை. நீ நினைக்கும்போது உன்னிடம் வருவான்" என்று.

வியப்பினாலும் வியப்பினால் ஏற்பட்ட அதிர்ச்சியினாலும் சிலையென உட்கார்ந்தபடி இருந்துவிட்ட சித்தரஞ்சனி நாற்புறமும் திரும்பிப் பார்த்தாள். எங்கும் யாரையும் காணோம். பேசியது தேவியாகத்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கும் வந்ததால், "சண்டீ! நீ கல்லல்ல, கல் உருவத்தில் எங்களுக்காகக் குடி கொண்டிருக்கும் ஜகன் மாதா. உன் கடாட்சம் இருந்தால் ஆகாதது என்ன இருக்கிறது? அவரை எப்படியும் நல்லபடி என்னிடம் அனுப்பி வை" என்று மன்றாடினாள். அந்த நினைப்புடனும் நிச்சலமான பக்தியுடனும் மீண்டும் படிகளில் ஏறி மேலே வந்தாள். மேலே வந்ததும் காற்றிலாடிய மரங்கள் பலபலவென அவள் தலைமீது பூமாரிபொழிந்தன. தனது ஈரச் சேலையை உலர்த்திக் கொள்ள ஒருபுறமாகப் பக்கத்திலிருந்த செடிகளின் மறைவுக்குப் போன சித்தரஞ்சனி மெதுவாகச் சேலையின் ஒரு பகுதியை மட்டும் இறுகச் சுற்றிக் கொண்டு இன்னொரு தலைப்பைக் கட்டிவிட இடம் பார்த்தாள். அந்தத் தலைப்பின் நுனியை மறைவிலிருந்த கையொன்று பற்றிச் சற்று மேலே இருந்த மரக்கிளையில் கட்டிவிட்டது. அடுத்துத் தொடர்ந்த நிகழ்ச்சி அவளைப் பேரதிர்ச்சிக்கு உள்ளாக்கியதா? பரவசத்துக்கு உள்ளாக்கியதா? அவளுக்கே புரியவில்லை. அந்த ஈர ஆடையுடனிருந்த அழகியைப் பின்புறமிருந்து கௌதமிபுத்ரன் அணைத்த பின்புதான் அவள் உண்மையை ஓரளவு உணர்ந்தாள். உணர்ந்தது அவள் மட்டுமல்ல, மரக்கலத்தில் நாகபாணனும் உணர்ந்து கொண்டான். சண்டிகாதேவியின் சித்தம் எப்படியெல்லாம் பலன் தரும் என்பதும் மகாக்ஷத்ரபனுக்கு விளக்கமாகவே புரிந்தது.

(தொடரும்)




# ஈகிள் பட்டாசுகள்




# EAGLE

## FIREWORKS CRACKERS & SPARKLERS

சென்னையில் உள்ள அனைத்து சூப்பர் மார்க்கெட்டுகளிலும், செங்கல்பட்டு மாவட்ட நுகர்வோர் கூட்டுறவு ஸ்டோர்சின் அனைத்து கிளைகளிலும், வட ஆற்காடு மாவட்ட கற்பகம் சூப்பர் மார்க்கெட் அனைத்துக் கிளைகளிலும், தென் ஆற்காடு மாவட்ட சரவணபவா சூப்பர் மார்க்கெட் அனைத்து கிளைகளிலும், கோயம்புத்தூர் மாவட்ட சிந்தாமணி சூப்பர் மார்க்கெட் அனைத்து கிளைகளிலும், திருப்பூர் வளர்மதி சூப்பர் மார்க்கெட் கிளைகளிலும், மதுரை மாவட்ட பாண்டியன் சூப்பர் மார்க்கெட் கிளைகளிலும் இராமநாதபுரம் மாவட்ட நுகர்வோர் கூட்டுறவு ஸ்டோர்ஸ் அனைத்து கிளைகளிலும், புதுக்கோட்டை மாவட்ட புவனேஸ்வரி சூப்பர் மார்க்கெட் அனைத்துக் கிளைகளிலும், கோயம்புத்தூர், ஊட்டி, பொள்ளாச்சி, சேரன் போக்குவரத்துக் கூட்டுறவு ஸ்டோர்களிலும், சீர்காழி தாலுகா கூட்டுறவு ஸ்டோர்சிலும், கும்பகோணம் சந்திரசேகரபுரம் கூட்டுறவு ஸ்டோர்களிலும், அச்சரப்பாக்கம் சத்தியமங்கலம், கோபி செட்டிபாளையம், மேட்டுப்பாளையம் ஆகிய ஊர்களின் கூட்டுறவு ஸ்டோர்களிலும், சங்ககிரி ஐ. சி. எல். கூட்டுறவு ஸ்டோர்சிலும், சிறுமுகை சவுத் இந்தியா விஸ்கோஸ் கூட்டுறவு ஸ்டோர்சிலும், கோயம்புத்தூர் லட்சுமி மிசின் ஒர்க்ஸ் கூட்டுறவு ஸ்டோர்ஸ், ராம்நாராயண் கூட்டுறவு ஸ்டோர்ஸ் மற்றும் சிறுவாணி சூப்பர் மார்க்கெட்டிலும், மற்றும் எங்களின் சொந்த விற்பனை டிப்போக்களாகிய சென்னை, ஈகிள் பயர் ஒர்க்ஸ் கம்பெனி, 31, பந்தர் தெரு, மதுரை, 48, கீழமாசி வீதி, மற்றும் பல கூட்டுறவுச் சிறப்பங்காடிகளிலும், சிற்றங்காடிகளிலும் பாரத நாட்டின் பட்டாசு வியாபாரிகள் எல்லாரிடமும் எங்களது தரம் மிக்க ''ஈகிள்'' டார்ஜான் பட்டாசுகளும், கம்பி, சக்கரம், சாட்டை, மற்றும் நூதன வாணவகைகளும் ''பேபி'' பொட்டு & ரோல் கேப் வகைகளும் ஜனரஞ்சகமாக விற்பனை ஆகிக் கொண்டிருக்கின்றன. பொது மக்கள் யாவரும் எங்கள் தரமிக்க ''ஈகிள்'' பட்டாசு வகைகளை வாங்கி குதூகலத்துடன் தீபாவளியைக் கொண்டாடி மகிழும்படி கேட்டுக் கொள்கிறோம்.

— தயாரிப்பாளர்கள் —

**தி சதர்ன் இந்தியா எக்ஸ்போர்டிங் கம்பெனி,**
**லார்டு பயர் ஒர்க்ஸ் இண்டஸ்டிரீஸ், லார்டு பேப்பர் கேப் பாக்டரி,**
**தபால் பெட்டி எண்: 69, 122, புது ரோட்டுத் தெரு, சிவகாசி—626 123.**

Phone : Office: 94 & 1600
Res: 572;
Fact: 21 & 1042.

Telex: 0448 — 243 LORD IN
Telegrams: "EXPORT"

### ஓசியில் கிடைத்த பதவி உயர்வு

காஞ்சீபுரத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். முதலில் தேடி வந்தது ஒரு எல். ஐ. சி. செக்—ரூ 3,000/—க்கு! அந்த மர்மம் விடுபடுவதற்குள் டி. எஸ். பி. பதவி உயர்வு கிடைத்திருப்பதாகச் செய்தி! மேலதிகாரிகள் அவசர அவசரமாக உயர்நீதிமன்றத்துக்கு மனு செய்ய ஏற்பாடு செய்தனர், என் பதவி உயர்வு நியமனத்தை எதிர்த்து! பின்புதான் தெரிந்தது டி. எஸ். பி. பதவி உயர்வு என் பெயரே (அதே இனிஷியலுடன்) உடைய மற்றொருவருக்குச் சேர வேண்டியது என்று. ரூ 3000/— காசோலையும் அதே நபருடையதுதான்.

— பி. கந்தசாமி, சென்னை—56.

### அவசரத்தால் வந்த குழப்பம்

மனைவிக்கு வந்த தபாலைப் பிரித்தார் கணவர். ஹாஸ்டலிலிருந்து மகள் அன்போடு எழுதியிருந்தாள். நான்கு மாதம் கர்ப்பமாக இருப்பதாகவும் அம்மாவுடன் வந்து இருக்க விரும்புவதாகவும் கூறியிருந்தாள். கடிதத்தைத் தொடர்ந்து நேரில் வந்த மகளிடம் 'பட் பட்'டென்று வெடித்தார் அப்பா. பெண்ணோ அழ ஆரம்பித்துவிட்டாள். கடிதத்தை வாங்கிப் பார்த்தாள். பக்கத்துத் தெரு கமலா அத்தையின் மகள் எழுதியிருந்த கடிதம் அது. கமலா அத்தையின் 69 ஆம் நம்பர் வீட்டுக்குப் போவதற்குப் பதில் 96 ஆம் நம்பரில் வசித்த கமலாவிற்கு வந்து சேர்ந்திருந்தது.

— எம். ராதா, இரணியல்.

### பாப்பாவும் பருவ மங்கையும்

எதிர் வீட்டு இளைஞர் (மணமாகாதவர்) என் ஐந்து வயது மகள் கீதாவுக்குத் தன் வீட்டில் பூக்கும் ரோஜாப் பூவைத் தினமும் அனுப்பி வைப்பார். ஒருநாள் உடம்பு சரியில்லாததால் புது வேலைக்காரன் மூலமாகப் பூக்களையும் சாக்லேட்டையும் அனுப்பி வைத்தார். அவன் அவற்றை வெகு சிரத்தையாக என் வீட்டிலேயே வேறொரு பகுதியில் வசித்த 18 வயது பருவ மங்கை கீதாவிடம் கொடுக்கப் போக ஒரே ரகளையாகிவிட்டது. பிறகு

# பெயர்க்








அந்தக் கீதாவையே அந்த இளைஞர் மணந்தது வேறு கதை.

— ஜெ. உமா, பம்பாய்—71.

### ப்ளீஸ், நான் பாடகன் இல்லை!

ஒரு முறை இல்லை, பல முறை பெயர்க் குழப்பம் ஏற்பட்டுள்ளது என் விஷயத்தில். பிரபலபின்னணிப் பாடகர் பி. பி. ஸ்ரீநிவாஸ் என்று நினைத்துக்கொண்டு தொலைபேசியில், "ஞாயிறு மாலை கச்சேரிக்கு 'டேட்' கொடுத்திருக்கிறீர்கள். ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளலாம் என்று ஃபோன் செய்தேன்" என்று ஒரு குரல்.

நான் வங்கி அதிகாரி, பாடகன் அல்ல என்று விளக்குவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிடும்.

வாசலில் பெயர்ப் பலகையைப் பார்த்துவிட்டு ஒரு பெண்மணி நேராக உள்ளே வந்துவிட்டார். "எவ்வளவு அடக்கமாக இருக்கிறீர்கள்! நான் நன்றாகப் பாடுவேன். எனக்குச் சினிமாவில் பாட ஒரு சான்ஸ்.." என்று ஆரம்பித்து என் நேரத்தைக் கணிசமான அளவு வீணடித்த பிறகே நான் 'உண்மையில்' யார் என்று தெரிந்து கொண்டு போனார்.

பி. பி. ஸ்ரீநிவாசன், சென்னை—40.

# குழப்பம்

**வாசகர் பங்கு**





## குழப்பமும் கோபமும்

டப்பாவில் மூடி வைத்திருந்த தேங்காய் சேவை ஊசிப் போய்விட்டதை அம்மாவிடம் சொன்னதும் அவள் அதை லக்ஷ்மிக்குக் கொடுத்துவிடும்படி சொல்ல, நான் அசட்டுத்தனமாக அதை வேலைக்காரப் பெண்மணி லக்ஷ்மியிடம் தரப் போய் அவள் மிகவும் கோபித்துக் கொண்டு கிளம்பிவிட்டாள். அவசரமாக அம்மா ஓடி வந்து, "நான் பசு மாடு லக்ஷ்மிக்குத் தரச் சொன்னதை உன்னிடம் தந்துவிட்டாள், இந்த அசட்டுப் பெண்!" என்று அவளைச் சமாதானம்செய்து வைக்க வேண்டியதாகிவிட்டது.

— ஜி. நீலா, மன்னார்குடி.

## 'சீரியஸ்' குழப்பம்

எங்கள் தெருவில் வசித்த செல்வத்தின் தங்கையைபெண்பார்த்துவிட்டுப்போனவர்கள் 'பெண் பிடிக்கவில்லை' என்று எழுதிய கடிதம் பக்கத்துத் தெருவில் வசித்த செல்வத்தின் வீட்டுக்குப் போய்விட்டது. அந்தச் செல்வத்தின் தங்கைக்குக் கல்யாணம் நிச்சயமாகி மூன்று நாட்களே ஆகியிருந்தன. கல்யாணப் பெண் வீட்டில் யாரும் இல்லாத வேளையில் கடிதத்தைப் படித்துவிட்டுத் தற்கொலை முயற்சியில் ஈடுபட்டுவிட்டாள். சரியான சமயத்தில் அவளைக் காப்பாற்றி உண்மையையும் கண்டறிந்தோம்.

— எஸ். கே. வேணி, திண்டுக்கல்—5.

## முன் கோபத்தால் குழப்பம்

கோபாலனை அவன் அப்பா வாய் நிறைய வசைபாடிக் கொண்டிருந்தார். 'தண்டச்சோறு கோபாலன், ஊர் சுற்றி' என்று சரளமாக வார்த்தைகள் வெளிப்பட்டன. மறு பக்கத்து வீட்டிற்குப் புதிதாகக் குடி வந்திருந்த கோபாலன் தன்னைத்தான் அவர் திட்டுவதாக நினைத்துக் கொண்டு சண்டைக்கு வந்துவிட்டார். அவர் வேலையில்லாப் பட்டதாரி. புரிய வைப்பதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது.

—காசி விஸ்வநாதன், திருப்பூர்.

## டெலிபோனில் குழப்பம்

ஆபீஸில் இருக்கையில் இல்லாத நேரத்தில் போன் செய்த ஒருவர் பெயரையும் நம்பரையும் கொடுத்து வைத்திருந்தார். அந்த நம்பருக்குத் திரும்ப போன் செய்தேன். பேசியது யார் என்றே புரியவில்லை. நீங்கள் யார் என்று அவரைக் கேட்டதும் அவருக்கு வந்ததே கோபம். "வீட்டுக்கு வா, உன்னைக் கவனித்துக் கொள்கிறேன்" என்று உறுமினார். பிறகுதான் அவர் தன் மனைவியுடன் பேசுவதாக நினைத்துக் கொண்டு பேசுகிறார் என்று புரிந்தது. என் பெயர் கொண்ட மற்றொரு பெண் ECD பிரிவில் வேலை பார்த்துக் கொண்டிருந்தாள். டெலிபோன் ஆபரேடர் ACD பிரிவு என்று புரிந்து கொண்டு அந்தப் பிரிவில் இருந்த எனக்கு போன் வந்ததாகக் குறித்து வைத்திருந்தாள். நான் விளக்கியதும் அவளும் என்னுடன் சிரிப்பில் சேர்ந்து கொண்டாள்.

— பானுமதி கணேஷ், ஹைதராபாத்.

## குழப்பம் தீர்ந்தும் துக்கம்

இந்திய—சீனப் போர் நடந்து முடிந்த சமயம். போர் முனையிலிருந்து ஒரு வாரத்தில் திரும்புவதாக என் கணவரிடமிருந்து செய்தி வந்ததும் வயிற்றில் பாலை வார்த்தாற் போல் இருந்தது. அதைத் தொடர்ந்து அவர் காலிழந்து மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருப்பதாக மற்றொரு தந்தி வரவே நாங்கள் மிகவும் கலங்கிப் போனோம். ஆனால் குறிப்பிட்ட தேதியில் என் கணவர் வந்து சேர்ந்



தார். மெல்ல பாண்டைத் தூக்கிக் காலைத் தொட்டுப் பார்த்தேன்! விஷயத்தைச் சொன்னேன். தந்தியில் குறிப்பிடப்பட்டிருந்தவர் மற்றொரு நாகராஜன் என்றார். அந்தச் சமயத்தில் ஏற்பட்ட நிம்மதிக்கு இடையே அந்த மற்றொரு நாகராஜனின் குடும்பத்தை நினைத்து நாங்கள் மிகவும் துக்கம் அடைந்தோம்.

— நா. ஜெயகுமாரி, வடலூர்.

## ஜெயித்த ஜெயந்தியும், ஜெயிக்காத ஜெயந்தியும்

விஷாரத் ஹிந்தித் தேர்வுக்குப் பணம் கட்டியும் உடல்நிலை சரியில்லாததால் பரீட்சை எழுத முடியாமல் போயிற்று. ஆனால் தேர்வு முடிவுகள் வெளியானபோது மதிப்பெண் ஏடும் விஷாரத் தேறிவிட்ட செய்தியும் என் வீடு தேடி வந்தன! இதில் எனக்கு வியப்போடு சிறிது சந்தோஷமும் இருந்தது. ஆனால் என் பெயர் கொண்ட மற்றொரு பெண்ணுக்கு முடிவே அறிவிக்கப்படாததால் அவள் ஹிந்தி பிரசார சபையில் சென்று விசாரித்திருக்கிறாள். முடிவு தவறான நபருக்கு அனுப்பி வைக்கப்பட்டிருப்பதை அவர்கள் கண்டுபிடித்து இரண்டு ஜெயந்திகளுக்கும் விளக்கம் அளித்தார்கள்.

— ஜி. ஜெயந்தி, விருதுநகர்.

## குழப்பத்தால் நன்மை

மலேஷியாவிலிருந்து என் தோழி ஆசையாக தபாலில் அனுப்பிய பரிசுப் பொருளை எங்கள் தெருவில் உள்ள மற்றொரு பிரியதர்ஷினி பெற்றுக் கொண்டுவிட்டதை அறிந்து அவளிடம் அதைத் திருப்பித் தருமாறு கேட்டேன். அவள் மறுத்துவிட்டாள்! மறு வாரம் அவளுக்கு ஒரு நிறுவனத்தில் வேலைக்கு நேர்முகத் தேர்வு அழைப்பு வந்தது. என் வீட்டார் அதை அவளிடம் சேர்ப்பிக்க வேண்டாம் என்று கூறியதைக் கேட்காமல் நான் அதை அவளிடம் கொண்டு கொடுத்தேன். அவள் நெகிழ்ந்து போய் என் பரிசுப் பொருள்களைத் திருப்பித் தந்துவிட்டாள்.

— எஸ். பிரியதர்ஷினி, மதுரை—1.

## விடிய விடியக் குழப்பம்

எங்கள் இருவருக்குமே ஆர். சுப்பிரமணியன் என்று பெயர். அலுவலகப் பதவி, குடியிருப்பு முகவரி இவற்றிலும் அதிக வித்தியாசமில்லை. தனிப்பட்ட வாழ்க்கையிலும் பல ஒற்றுமைகள்—இருவருக்கும் இரண்டு மகன்கள், ஒருவன் வெளிநாட்டில், இருவரது மனைவிகளும் நன்றாகப் பாடுபவர்கள். எங்கள் கோவா சிறிய ஊர் என்பதால், பொதுவான நண்பர் குழாம். அடிக்கடி பெயர்க் குழப்பம் ஏற்படும். ஒருமுறை அவர் தன் வீட்டுக்கு போன் மூலம் விருந்துக்கு அழைத்திருந்த நண்பர் என் வீட்டுக்கு வர, நாங்கள் ஏற்கனவே சாப்பிட்டுவிட்டிருந்தோம்! இருப்பினும் அவருக்குச் சாப்பாடு போட்டு எங்களுடன் டி. வி. பார்க்கச் சொன்னோம். அருகாமையில் என் பெயருள்ள நண்பரும் அவர் மனைவியும் விருந்து தயார் செய்து வைத்துவிட்டுச் சாப்பிடாமலே காத்திருந்து களைத்துப் போய்த் தூங்கிவிட்டிருந்தனர். மறுநாள் காலைதான் விஷயம் தெளிவாயிற்று.

— ஆர். சுப்பிரமணியன், கோவா—1.

## குழப்பத்தால் கிடைத்த 'டிபன்'!

ஆண் குழந்தை பிறந்திருப்பதாக ஆபீசுக்கு போன் வரவும் முதல் குழந்தை பிறந்த பூரிப்பில் எல்லோருக்கும் சிற்றுண்டி வாங்கப் பணம் கொடுத்துவிட்டுப் போய்விட்டார் சுப்பிரமணியம். எல்லோரும் 'டிபனை' ஒரு பிடி பிடித்துக் கொண்டிருந்தபோது, திரும்பவும் போன் வந்தது. எங்களுடன் இருந்த மற்றொரு சுப்பிரமணியத்துக்கு ஆறாவது குழந்தை பிறந்திருப்பதாகவும் முதலில் வந்த செய்தி அவருக்கே போயிருக்க வேண்டும் என்றும் தெரிந்தது. அடுத்த இரண்டு நாட்களில் முதல் சுப்பிரமணியத்துக்கு நிஜமாகவே குழந்தை பிறந்தது. மீண்டும் எங்களுக்கு டிபன்! பிறப்பதற்கு முன்பே டிபன் வாங்கித் தந்த அந்தக் குழந்தையை நாங்கள் ஆபீஸில் செல்லமாக கர்ணன் என்று அழைக்கிறோம்.

— ரெ. சண்முகசுந்தரம், தூத்துக்குடி.

**ப்ளோப்ளாஸ்ட் நிறுவனம் வழங்கும் வி. ஐ. பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**எஸ். கே. வேணி,**
**15, தங்கம்மாள் இல்லம்,**
**ஆர். ஆர். புதூர்,**
**திண்டுக்கல்—5.**



காட்பரீஸ்

# போர்ன்விடா

Cadbury's
Bournvita
MILK
SUGAR
MALT
COCOA
NOW SAVE Rs. 2/-

## சுறு சுறுப்பு பானம்!

போர்ன்விடா—கோகோ, மால்ட், பால் மற்றும் சாக்கரையின் ஊட்ட கலன்களைக் கொண்ட ஒரு உன்னத உணவு பானம் ஆகும். 100 ஆண்டுகளுக்கும் மேலாக அனுபவம் உடைய காட்பரி நிபுணர்களால் தயாரிக்கப்படுவது போர்ன்விடா. ஒவ்வொரு கப் பாலுடனும் இரண்டு ஸ்பூன் போர்ன்விடா சேர்த்து, உங்கள் குடும்பத்தினருக்கு சுவையான பானம் அளியுங்கள். வளரும் குழந்தைகளுக்கு விசேஷமாக நன்மை அளிப்பது போர்ன்விடா. அவர்களுக்கு தேவைப்படும் விசேஷ ஊட்டச் சத்தும் சுறுசுறுப்பும் பெற்றிட தினமும் இருவேளை அவர்களுக்கு போர்ன்விடா தாருங்கள்.

கவனத்துடன் வளர்த்திடும் ஒரு அன்னை கூறுகிறாள் "என் குழந்தைகளுக்கு போர்ன்விடா தருவதினால், வளரும் வயதில் அவர்களுக்குத் தேவையான விசேஷ ஊட்டம் கிடைக்கிறது. ஆகவே நல்ல வளர்ச்சி. போர்ன்விடா பயிற்சி."



போர்ன்விடாவின் இனிமைக் காலம். போர்ன்விடா
அளித்தவரை பாசமனங்கள் நேசத்தோடு நினைந்து மகிழும் ஒருநாள்.

"என்ன நாய்க்கரே... தானு சிரிச்சுக்கி றீங்க... வர்றீங்களா ஒரு டீ சாப்பிடலாம்..." என்றது ஒரு குரல்.

விழிப்புக்கும் உறக்கத்துக்கும் ஊடாக, கனவில் நினைத்திருந்தது உணர்வுக்கு வர, வெட்கத்துடன் சிரித்துக் கொண்டு, குரலின் சொந்தக்காரரைப் பார்த்தார்.

யாரும் இல்லை.

வீதியின் இருபுறமும் தேடினார். பால் குவளைகளுடன் ஒருவர் சைக்கிளில் போய்க் கொண்டிருந்தார். ஊகூம். அவராக இருக்க முடியாது. அவர் வழக்கமாக உட்காரும் ஒதியஞ்சாலை மைதான ஓரம். அதே தூங்கு மூஞ்சி மரத்தடி. விறைத்துக் கொண்டு நிற்கும் விளக்கு மரம். கீழே கோரைப் பாய். இடப்பக் கம் கிளிக் கூண்டு. கூண்டுக் கிளியையும் தன்னையும் தவிர வேறு ஜீவன்கள் அருகில் இல்லை.

"என்னடா இது... குரல் வருது... ஆளைக் காணோம்... குறளி வித்தையால்லே இருக்கு..." என்றார் வாய்விட்டு.

நாய்க்கர் எது பேசினாலும், அதை எதிரொலிக்கிற வழக்கம் அவர் பச்சைக் கிளிக்கு ஏற்பட்டிருந்தது.

'கிக்கி' என்றது அது.

"நீ யாரையாச்சும் பார்த்தியா... நாய்க்கரேன்னு கூப்பிட்டுச்சே ஒரு குரல். டீ சாப்பிட வேறே கூப்பிட்டுச்சி..."

'கிக்கி'

"இல்லையா... ஆளைக் காணோம்... குரல் மட்டும் வருது... ஊம்..." என்றார். மீண்டும், தன்னைத் தூக்கி வைத்துக் கொண்டு சோறு ஊட்டிய அம்மாவிடம் ஒப்புவித்துக் கொண்டார். அந்த நினைப்பேதான் எவ்வளவு ஆசுவாசமாக இருந்தது.

நாய்க்கர் மேலே மேலே போய்க் கொண்டிருந்தபோது அவரை மண்ணுக்குக்கொண்டு வந்தது வயிறு.

உந்திச் சுழிக்கு நேராய்த் தொடங்கி, வயிறு முழுக்கப் பரவி, துணி பிழிவது போல் குடலை முறுக்கி, ஒரு உதறு உதறி தின்றது வலி. நாய்க்கருக்குத் தெரிந்து விட்டது. இது பசி.

நேற்று மத்தியானம் ரெண்டு மசால் வடையும் டீயும் சாப்பிட்டிருந்தார். சாயங்காலம் ஒரு டீ சாப்பிட்டிருந்தார். இன்று காலை வரை வயிற்றில் ஒன்றும் விழவில்லை. ஏன் போடவில்லை என்று கேட்கிறது அது. அதன் பாஷை அது... ஒரு டீ சாப்பிட்டால் நன்றாய் இருக்கும். இருக்கும்தான். துட்டு வேணுமே. இந்நேரம் ரெண்டு வாட்டியில்லே டீயை ஊத்திக்கிட்டு இருப்பேன். புள்ளையார் கோவில் வாசல், சுகுமாரன் டீயை இது நேரம் வரைக்கும் சாப்பிடாம இருக்கேன்லை, அதுதான் களைப்பு.

வைகறையில்எழுந்துகொள்கிறநாய்க்கர், தெருக் குழாயில், பெண்கள் வருவதற்கு முன்னமேயே குளித்து, கழுத்துக்கும் கீழே இறங்கி வருகிற தலைமுடியைத் துவட்டிக் கொண்டு, திருநீற்றைக் குழைத்து நெற்றிக்கு இட்டுக் கொண்டு, மேலே மார்பை மூடிய துண்டும், கெட்டி நீலக் கைலியும், கட்டைச் செருப்பும் கிளிக் கூண்டுமாகப் புறப்பட்டுப் பிள்ளையார் கோவில் வாசலில் நின்று,



# களைப்பு

ரெண்டு நிமிஷம் கண்ணை மூடிக் கொண்டிருந்துவிட்டுக் கிளம்பி, சுகுமாரன் டீக் கடை வாசலில் நின்றால், கிழக்கு வெளுக்கும். நீர் மொண்ட பனிக்காற்று உடம்பைச் சிலிர்க்கும். இன்றும் சுகுமாரன் கடை வாசலில், பழக்கதோஷத்தால் வந்து நின்றார். சுகுமாரன் கையில் இரண்டு பத்தியைக் கொண்டு சாமி படத்துக்கு முன் நின்றிருந்தான். கையில் காசு இல்லாதது அப்போதுதான் அவருக்கு உறைத்தது. சத்தம் இல்லாமல் நழுவிவிட்டார். 'சே, என்ன மடத்தனம் பண்ண இருந்தோம்... போணி பண்ணற நேரத்தில கடன் சொல்ல இருந்தோமே...' ஓடி வந்து பாயை உதறிப் போட்டு உட்கார்ந்ததும்தான் அவர் அமைதியானார்.

''என்ன ஜோசியக்காரரே... போணி ஆச்சா?'' என்றது ஒரு குரல்.

திடுக்கிட்டுப் போனார் நாய்க்கர். இம்முறை அரூபம் இல்லை. நிஜமான மனுஷன் தான். கிளீனர் கிஷ்டன் எதிரில், ஆயிலும் அழுக்கும் ஏறிய காக்கிச் சட்டையும், புகையும் பீடியுமாக நின்றிருந்தான்.

''இனிமேதான்...'' என்றார் நாய்க்கர்.

''இவ்ளோ காலங்கார்த்தால எவன் வருவான்னு உக்காந்திருக்கீரு... வாயேன் ஒரு டீ சாப்பிடலாம்...'' எதிர்ச் சரகத்திலேயே வரிசையாகப் பெட்டிக் கடைகளும், டீக்கடைகளும் இருந்தன. நாய்க்கர் எழ இருந்தார். என்னவோ பிடித்து அவரை அழுத்தியது. மனம் மாறி, ''நீ போய் வா. நான் இப்பத்தான் சாப்பிட்டேன்...'' என்றார். வாயை மூடி தொங்கிக் கொண்டிருக்கிற நரை மீசையைத் தடவி விட்டுக் கொண்டே. கிஷ்டன் போய் விட்டான்.

நாய்க்கர் சமைந்து போய் உட்கார்ந்திருந்தார். 'எது என்னைத் தடுத்தது? ஏன் நான் எழுந்து போகவில்லை... உபசாரத்தோடு வந்த டீயை எதற்காக மறுத்தேன்...? புரிந்தாற்போல் இருந்தது. கிஷ்டனின் அழைப்பில் ஒரு 'ஐயோ பாவம்' இருந்திருக்குமோ?



'நல்லமுத்து நாய்க்கருன்னு, தலைப்பா கையை அவுத்து -அவனவனும் கக்கத்தில வச்சுக்கிட்டு நிப்பானுவ. நீ பாத்திருக்கணுமே அந்தக் காட்சியை, பச்சையம்மா. வேஷ்டி முனையைத் தொடையில சொருகிக்கிட்டு நிப்பானுவ. ராசா மாதிரி வாழ்ந்தவங்க நாங்க...'

நாய்க்கர் தனக்குள் முழுகிப் போனார்...

நாலுகைத் தாவாரம். நடுவில் வாசல்,. கம்பளம் விரித்துப் பத்து இருபது பேர் உட்கார்ந்திருந்தார்கள்.

'நம்ம பஞ்சாயத்துல ரெண்டு பேருக்கும் சம்மதம்தானே...' என்கிறார், கூட்டத்திலிருந்து கொஞ்சம் தள்ளி அட்டணைக்கால் போட்டு உட்கார்ந்திருந்த நல்லமுத்து நாய்க்கர்.

''உங்க வார்த்தைக்கு எதிர் வார்த்தை ஏது? என்னமுனை பிசகுமா நாய்க்கர் ஞாயம்?'- என்று இரண்டு பக்கத்தார்களும் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்கிறார்கள்.

''சரி, அப்போ கையை நனைங்க...''

கூட்டம் திடுக்கிட்டுப் போகிறது. ஒருத்தர், ரெண்டு பேர் என்றால் பரவாயில்லை. பத்து இருபது பேரா, திடுமெனப் போய்ப் பந்தியில் உட்காருவது?

''பரவாயில்லே... இன்னொரு வாட்டி பாக்கறது... பையன் கல்யாணத்துல வட்டி போட்டுச் சாப்பிடறது...'' என்று ஒரு பெரியவர், தூணோரம் நின்றிருந்த பெரியசாமி நாய்க்கரைக் கண்ணால் காட்டிச் சொல்கிறார்.

''அது இருக்கவே இருக்கு... இப்போ கையை நனைங்க... சாப்பாட்டு நேரத்துல, நாய்க்கன் வீட்லேந்து மனுஷங்க பட்டினியா போறதாவது? அப்புறம் இந்த உசுரு வாழ்க்கை எதுக்கு? பேசாமே கையை நனைங்க...'' என்று கட்டளை போல் சொல்கிறார் நல்லமுத்து நாய்க்கர்.

கூட்டம் மறுப்பேதும் சொல்ல வழியின்றி, இரண்டாம் கட்டுக்குப் போகிறது. நாய்க்கர் பையனை அழைக்கிறார்.

''அப்பா பெரியசாமி... பந்திய கவனி...'' என்கிறார்.

வாழைக்காய்க் குழம்பும், எண்ணெய் மினுக்குகிற உருளைப் பொரியலும், பொன்னாங்கண்ணிக் கூட்டும் அன்றைக்கு. பெரிய சாமி நின்று பந்தி விசாரணை செய்கிறார்.

கட்டித் தயிரைப் பிசைந்தவாறு ஒரு கிழவனார் சொல்கிறார். ''பெரியசாமி... ராசாவுக்குப் படைஊழியம் பண்ண பரம்பரைப்பா நீயி... வன்னிய க்ஷத்திரியன் ஆச்சே உங்க அப்பன்...'' என்கிறார், கடைவாயில் தயிர் வழிய.

பெரியசாமி, அரும்புகிற மீசையைத் தடவிக் கொள்கிறார்...

கூண்டிலிருந்து கிளி கிக்கீ என்றவாறு, மூக்கைச் சிறைக்கம்பிகளில் வைத்துத் தீட்டிக் கொண்டது. நாய்க்கர் அதைப் பார்த்தார், அவருக்கு நெஞ்சு கனத்தது. கூண்டைத் திறந்து, கிளியை எடுத்து மேலே மூடு பலகையின் மேல் விட்டார். அது, ஒரு அடி நீளமே இருக்கும் பலகையின் ஒரு முனையிலிருந்து, மறு முனை வரை, இவ்வாறு விடப்படும் போதெல்லாம் நடப்பது வழக்கம். இப்போது பிடித்து வைத்தது மாதிரி நின்றது. தலையைக் கவிழ்ந்து கொண்டது. கழுத்து மோதிரம் தெரிய, தரையைப் பார்த்தது கிளி.

''உம்... பார்த்தியா... நான் என்னைப் பத்திதானே, என் வவுத்துப் பசியைப் பத்திதானே நொந்துக்கிட்டு கிடக்கேன். உன்னைப் பத்தி, இன்னடா ஒரு உசுரு சென்மம் பக்கத்துல குந்திக்கிட்டுக் கிடக்கேன்னு யோசிச்சுப் பார்த்தேனா?''

தலையைக் கவிழ்ந்து கொண்டு சில நிமிஷங்கள் உட்கார்ந்திருந்தார் நாய்க்கர். பிறகு, கூண்டின் மறுமுனையில் வைத்திருந்த டப்பியை எடுத்தார். காலியாகிப் போன பெருங்காய டப்பி அது. நெல்லும், சமயங்களில் சில்லறையும் போட்டு வைத்திருப்பார்.

டப்பியை எடுத்தது பழக்க தோஷம்தான். நேற்று ராத்திரியே அது காலியாகி விட்டிருந்தது. காந்தி பார்க் பக்கத்துத் தனம்மாள் ஒரு புண்ணியமாகக் கருதி அவ்வப்போது கிளிக்காக நெல்லும், பழமும் கொடுத்துக் கொண்டிருந்தாள். நேற்று ராத்திரி அவளை அவர் பார்த்திருக்க வேண்டும். மறந்துவிட்டார்.

'இந்தக் கிளிக் குஞ்சு வயித்துக்கும் ரெண்டு மணி போட வக்கத்துப் போயிட்டேனே...' என்றார் மெல்லிய முனகும் குரலில்.

கிளி 'கிக்கீ' என்றது. கொஞ்சமாக உற்சாகமின்றி ரெண்டு எட்டு எடுத்து வைத்தது.

''பச்சையம்மா...''

''கீ.''

''கொஞ்சம் பொறுத்துக்கோம்மா... நான் யாசகம் வாங்க மாட்டேன்... இந்தப் பயலுவ கிட்டே கடனும் வாங்க மாட்டேன்... வாங்கி நான் பட்ட சொல்லடி உனக்குத் தெரியாது... மனசுல ரத்தம் கசியறது யாருக்கும்மா புரியுது...? எல்லாப் பயலும் நாக்கில கத்திய இல்லே ஒளிச்சு வச்சுக்கிட்டுத் திரியறானுவ...''

சிறிது நேரத்தில், கிராமத்தினர் என்று பார்த்த மாத்திரத்தில் அறியத் தக்க, நடு வயதுப் பெண்ணும், ஒரு இளம் பெண்ணும் அவர் முன்னால் வந்து குந்தினார்கள்.



**டாக்டர்: பத்திரிகையில் வரும் ஜோக்குகளைப் படித்துச் சிரிப்பதுண்டா?**

**ம. நோயாளி: உண்டு டாக்டர்!**

**டாக்டர்: அப்படியென்றால் இப்பொழுது நீங்கள் மனவியாதி முற்றிய நிலையில் இருக்கிறீர்கள் என்று அர்த்தம்!**

**—நவபாரதி.**

# ஓர் வேண்டுகோள்

சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளுக்கு இலவச உணவு, உடை, இருப்பிடம் கல்வி, அளித்து வரும் சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம் ஆண்டு தோறும் தீபாவளி அன்று குழந்தைகளுக்கு புத்தாடைகள், பட்டாசுகள், இனிப்புகள் வழங்கி தீபாவளியை சிறப்பாக கொண்டாட பொதுமக்கள் பண உதவியோ அல்லது பொருளுதவியோ கொடுத்து உதவும்படிக் கேட்டுக் கொள்கிறோம்.

நாங்கள் ஆதரவற்ற குழந்தைகளுக்கு அடைக்கலம் கொடுத்து அவர்களை ஒருபுதியபாதையில்கொண்டுச் செல்லும் ஆசிரமத்தின் அரியதொரு செயலையும், திக்கற்ற முதியோர்களுக்கு அடைக்கலம் கொடுத்து வருவதையும்தாங்கள் அறிந்திருப்பீர்கள் என்று நினைக்கிறோம். எனவே இது சம்பந்தமாக தாங்கள் அளிக்கும் உதவி ஆதரவற்ற குழந்தைகளுக்கும், ஆசிரமத்தில் இருக்கும் முதியோர் இல்லத்தின் ஆதரவற்ற முதியோர்களுக்கும், இல்லக் குழந்தைகளுக்கும் மனமகிழ்ச்சியுடன் தீபாவளி திருநாளைக் கொண்டாட அவர்களுக்கு புத்தாடைகள், பட்டாசுகள், இனிப்புகள் வழங்க ஏதுவாக இருக்கும் என்றுத் தெரிவித்துக் கொள்கிறோம்.



பொது மக்கள் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருப்பினும் அக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். பொது மக்கள் தங்களால் இயன்ற உதவியை பணம் அல்லது பொருட்களாக, நிர்வாகி, "சிவானந்த குருகுலம், நெ. 20, கம்பர்தெரு, கிழக்கு தாம்பரம், சென்னை 600059 என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்குமாறுக் கேட்டுக் கொள்கிறோம்.

செயலாளர்.

கண் மண்டிக்கும் திரைப்படலத்தின் ஊடே, வந்தவர்களை உற்று நோக்கினார் நாய்க்கர்.

''என்னங்க நாய்க்கரே... என்னை தெரியலியா... நரன்தான் வில்லியனூரு பழநியம்மா... போன மாசம் கூட வந்து ஜோசியம் பார்த்துக்கிட்டுப் போனேனே...''

''அடடே... அவங்களா... இருங்க... வயசாயிடுச்சில்லே... கண்ணை மறைக்குது... பஸ் ஸாக்குப் போறீங்களாக்கும்...''

''ஆமா... இது எங்க அக்கா மவ... மாப்பிள்ளை ஊட்டுக்காரங்க வந்தாங்க... பார்த்தாங்க... தபால் எழுதறதா சொல்லிட்டுப் போனாங்க... போனவங்க போனவங்க தான்... சம்மதம்குடுத்தாங்கன்னா வர தையில முடிச்சுடலாம்... பார்த்துச் சொல்லுங்க... வயசு வந்த பொண்ணை எம்மாங்காலம் வச்சுக்கிட்டு இருக்கிறது...?''

''நம்ம பச்சையம்மா 'கிளி'ஞ' சொல்லிப் புடுவாளே... வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டில்லே அவகிட்டே... கிளின்னு நெனக்காதீங்க... அவ சுகரிஷி வம்சமில்லே... ஹும்..'' என்றார்.

இருவரும், மேல் பலகையில் இருந்த கிளியை, மிகுந்த நம்பிக்கையோடும், கொஞ்சம் பக்தியோடும் கூடப் பார்த்தார்கள்.

நாய்க்கர் சீட்டுக் கட்டுக்களைப் போல அடுக்கி வைக்கப்பட்டிருந்த, தெய்வங்களின் படமும், வாக்கும் அச்சிடப்பட்டிருந்த அட்டைகளை எடுத்துப் பாயில் விரித்தார்.

''பொண்ணு பேரு சொல்லுங்க...''

''மகாலட்சுமி...''

கிளியை இறக்கிப் பாயில் விட்டார்.

''அம்மா... பச்சையம்மா... மகாலட்சுமி என்கிற பேர் ராசிக்கு, நல்ல பலன் சொல்லும்மா... நல்லது, நடந்தது, நடப்பது, நடக்கப் போறது நாலையும் பாத்து நல்ல வாக்கு சொல்லு... மனசுல உள்ளது பலிக்குமா பலிக்காதான்னு பார்த்துக் குறி சொல்லும்மா...''

கிளி பழக்க தோஷத்தால், நெல்லுக்கு எதிர் பார்த்து நின்றது. பிறகு கிடைக்காது என் று தனக்கே தெளிவு ஏற்பட்டதைப் போல, சீட்டை அணுகி, இரண்டை எடுத்துப் பிறகு வேண்டாம் என்பது போல் போட்டு விட்டு, மூன்றாவது சீட்டை, வாயில் கவ்வி நாய்க்கரிடம் கொண்டு கொடுத்தது. அவர் அதைப் பெற்றுக்கொண்டவுடன், தானாகவே கூண்டுக்குள் சென்று புகுந்து கொண்டது.

சீட்டில் இருந்த வாசகத்தைப் படிக்கத் தொடங்கினார். அதற்கென ஏற்பட்டிருந்த ராகத்தோடு படித்தார்.

வந்தவர்கள் இருவரும் ஏதோ புரிந்தது போல் தலையசைத்தார்கள். நாய்க்கர் வியாக்கியானம் செய்யத் தொடங்கினார்.

''அம்மணி... காளி வந்திருக்கா... ரொம்ப விசேஷ ஜாதகம்மா... இனிமே உங்க கவலையெல்லாம் சூரியனைக் கண்ட பனி மாதிரி மறைஞ்சுடாதா? ஆகாதகாரியங்கள் ஆகும்னு வந்திருக்கு. அப்போ கல்யாணம் நிச்சயம். மாப்பிள்ளை அப்பிடி இப்பிடி இருந்தாலும், காளி ஆத்தா அவன் காதைப்பிடிச்சி இழுத்து வந்து உங்க வீட்டுல விடுவா...'' என்று விட்டு இளம் பெண்ணைப் பார்த்தார்.

அவள் வெட்கப்பட்டுக் கொண்டு தலை கவிழ்ந்து உட்கார்ந்திருந்தாள். முகத்தில் சிரிப்பு வழிந்தது.

முதியவள் வெகுநிம்மதியோடு இருந்தாள். தன் இடுப்பில் சொருகி இருந்த சுருக்குப் பையை எடுத்து, திறந்து, ஒரு எட்டணாக் காசை எடுத்து நாய்க்கர் முன்னால் வைத்தாள்.

நாய்க்கர் காசை எடுத்து, கூண்டையும், பாயையும், சேர்த்துச் சுற்றி இரட்டை முறித்து, தன் முன்னால் வைத்துக் கொண்டார்.

''நாங்க வர்றோம்...'' என்று வந்தவர்கள் கிளம்பினார்கள்.

''ஆகா... போய்ட்டு வாங்க... நல்லது நடக்கும்... கல்யாணம் கண்டிப்பா நடக்கும்.. பட்சியம்மா சொல்லு பரமசிவன் சொல்லு... போய்ட்டு வாங்க...'' என்றார்.

நாய்க்கர் காசைப் பார்த்தார். அதைக் கையில் எடுத்துக் கொண்டு, நேராக ரோட்டைக் கடந்து டீக் கடையின் முன் வந்து நின்றார். எட்டணாவுக்கு இரண்டு மசால் வடைகள் வாங்கி, எரிகிற வயிற்றில் போடலாமா என்று யோசித்தார். சூடாக டீ சாப்பிடலாமே என்று மீண்டும் யோசித்தார். திடீரென்று பக்கத்துப் பெட்டிக் கடைக்கு முன் போய் நின்றார். இரண்டு பெரிய பழக் குலைகள் தொங்கின.

''என்ன ஜோஸ்யரே... பழம் வேணுமா...?'' என்றார் கடைக்காரர்.

''உம்... என்ன விலை...?''

''விலையைக் கேக்காதீங்க... மஞ்சள் இப்போல்லாம் வர்றதில்லே... ரஸ்தாளிதான்... கனிஞ்சு கெடக்கு... ஒண்ணு எட்டணாக்குத் தரேன்... எவ்வளவு வேணும்...''

''எட்டணாவா...?''

''காசைப் பார்க்காதீங்க... பொருளைப் பாருங்க...''

நாய்க்கர் சம்மதம் சொல்வதற்கு முன்னமேயே பழத்தைப் பிட்டு அவரிடம் நீட்டி விட்டார் கடைக்காரர்.

எட்டணாவைக் கொடுத்துவிட்டு, ரோட்டைக் கடந்து, தன் மரத்தடிக்கு வந்தார் நாய்க்கர். இந்த நடை நடந்ததே இளைப்பு வாங்கியது.

கூண்டிலிருந்த கிளிக்கு, பழத்தை உரித்து வைத்தார்.

கிளிக்கு உயிர் திரும்பியது போல, 'கிக்கி' என்று கத்திக் கொண்டு, கொத்திப் பழத்தை உண்ணத் தொடங்கியது.

மீண்டும் அந்த வலி. உந்திச் சுழியில் தொடங்கி, வயிறு முழுக்க வியாபிக்கும், உடம்பை உதறி எடுக்கும், வலி.

'கொஞ்ச நாழியாவது படுக்கத்தான் வேண்டும்...' என்று நினைத்தார். ''சம்முவா' என்றவாறு, கையைத் தலைக்கு அணையாக வைத்துக் கொண்டு, சுருட்டிக் கொண்டு படுத்தார். கண்ணை மூடிக் கொண்டார்.

மனசு என்னமோ நிம்மதியாக இருப்பதாக உணர்ந்தார்.



**மில்க்மெய்ட் ஸ்பஞ்ச் கேக்**
6-8 பேர்களுக்கு

தேவை:

200 கி. மைதாமாவு, 2 தேக்கரண்டி ரொட்டி பவுடர், 150 கி. வெண்ணெய்/நெய், உப்பு ஒரு சிட்டிகை, 4 முட்டைகள், 1½ டின் மில்க்மெய்ட், 1 தேக்கரண்டி வனிலா எஸ்ஸென்ஸ்.

செய்முறை:

8" வாணலியில் லேசாக நெய் தடவுங்கள். மாவு, ரொட்டிப் பவுடர், உப்பு ஆகியவற்றை கலந்து இரண்டுமுறை சலித்து எடுங்கள். ஒரு பாத்திரத்தில் வெண்ணெய்யை போட்டு மிருதுவாக பஞ்சுபோல் ஆகும் வரை கலக்கவும். முட்டைகளை ஒவ்வொன்றாக ஊற்றி, ஒவ்வொரு தடவையும் நன்கு கலக்கவும். மில்க்மெய்டும் எஸ்ஸென்ஸும் விட்டு கலக்கி, மாவில் வைத்து மடிக்கவும்.

இவற்றை நெய் தடவிய வாணலியில் ஊற்றி நல்ல சூட்டில் 50 நிமிடத்துக்கு வேகவிடவும். பிறகு சூட்டை மிதமாக்கி 20 நிமிடத்துக்கு அல்லது கேக்கில் சொருகிய கத்தி மாவு ஒட்டாமல் வரும் வரை சுடவும். கம்பிவலைத் தட்டில் வைத்து குளிர்விக்கவும்.

**மில்க்மெய்ட் சேவியான்**
4 பேர்களுக்கு

தேவை:

1 டின் மில்க்மெய்ட், 50 கி. சேமியா, ½ கப் கிஸ்மிஸ் மற்றும் பருப்புக்கள் (விரும்பினால்), 2 கப் பால், 2 டேபிள் ஸ்பூன் வெண்ணெய்.

செய்முறை:

வெண்ணெயில் சேமியாவை பொன்னிறமாக வரும் வரை வறுக்கவும். பாலும் மில்க்மெய்டும் சேர்த்து குழைவாக வரும் வரை காய்ச்சவும். கிஸ்மிஸ், பருப்பு சேர்த்து சூடாகவோ ஆற வைத்தோ பரிமாறுங்கள்.





**மில்க்மெய்ட் பாயசம்:**
6 பேர்களுக்கு

தேவை:

1 டின் மில்க்மெய்ட், 1 லிட்டர் பால், 100 கிராம் அரிசி, பொடித்த ஏலக்காய் 2, ¼ கப் முந்திரி பருப்பு, திராட்சை (விரும்பினால்)

செய்முறை:

பாலில் அரிசியை போட்டு நன்றாக வேக விடவும். மில்க்மெய்ட் ஊற்றி பொடித்த ஏலக்காயை போட்டு. வேண்டிய அளவு குழையும் வரை இளஞ்சூட்டில் சமைக்கவும். உடைத்த முந்திரி பருப்புகளையும், திராட்சையையும் தூவி சூடாகவோ குளிர்ச்சியாகவோ பரிமாறுங்கள்.



மில்க்மெய்ட் ஐஸ்கிரீம்:
4 பேருக்கு

தேவை:

ஐஸ்கிரீம், 3 முட்டை, ½ டின் மில்க்மெய்ட்,
1 தேக்கரண்டி வனிலா எஸ்ஸென்ஸ், ¾ கப் பால்.

சாக்லேட் சாஸ்:

50 கிராம் வெண்ணெய், 30 கிராம் சாக்லேட்,
½ டின் மில்க்மெய்ட்.

செய்முறை:

ஐஸ்கிரீம்: முட்டையை உடைத்து வனிலா, பால், மில்க்மெய்ட் சேர்த்து அடர்த்தியான கிரீம் வரும் வரை நன்கு கலக்கவும். பின்னர் கிண்ணத்தில் ஊற்றி ஃப்ரிஜ்ஜில் வைக்கவும்.

சாக்லேட் சாஸ்: எல்லாப் பொருட்களையும் சேர்த்து இதமான சூட்டில் கொழகொழப்பாகும் வரை காய்ச்சவும். சூடாக ஐஸ்கிரீமோடு பரிமாறுங்கள்.

மில்க்மெய்ட் எக்லெஸ் கேக்
10—12 பேர்களுக்கு

தேவை:

2 கப் மாவு, 1½ கப் வெண்ணெய் நெய், 1 டின் மில்க்மெய்ட், 1 கப் தண்ணீர் ½ தேக்கரண்டி வனிலா எஸ்ஸென்ஸ், உப்பு ஒரு சிட்டிகை, ¾ தேக்கரண்டி ரொட்டி பவுடர், 1 கப் உடைத்த பருப்பு.

செய்முறை:

வெண்ணெயை பஞ்சு போலாகும் வரை கலக்கவும். மில்க்மெய்ட், தண்ணீர், கிரீமாக கலக்கிய வெண்ணெய், உடைத்த பருப்புக்கள் ஆகியவற்றை ஒரு வாணலியில் போட்டு கொதிக்க விடவும். பிறகு அடுப்பிலிருந்து இறக்கி ஆறவிடவும்.

மாவு, ரொட்டி பவுடர், உப்பு ஆகியவற்றை சேர்த்து சலிக்கவும். இதை மில்க்மெய்ட் பருப்பு கலவையுடன் சேர்த்து நன்கு கலக்கவும்.

வனிலா எஸ்ஸென்ஸை சேர்த்து, நெய் தடவிய 8" வாணலியில் ஊற்றவும். 1¼ மணி நேரத்துக்கு 150° C சூட்டில் சுட்டு எடுக்கவும்.

இதற்கு மேல் சாக்லேட், லெமன் அல்லது ஆரஞ்சு சுவை கொண்ட மில்க்மெய்ட்டும் ஊற்றலாம்.





மில்க்மெய்ட் லெமன் ஸுஃப்ளே
4 பேர்களுக்கு

தேவை:

2 எலுமிச்சை, 3 முட்டை பிரித்தது, ½ கப் சர்க்கரை
2 தேக்கரண்டி ஜெலட்டின், ½ டின் மில்க்மெய்ட்,
அலங்காரமாய் வைக்க கொஞ்சம் செர்ரி பழங்கள்.

செய்முறை:

எலுமிச்சம் பழங்களை சாறு பிழிந்து, ஒரு பழத்தின் மூடியை பொடியாகத் துருவிக் கொள்ளுங்கள். சூடான தண்ணீர் உள்ள ஒரு வாணலி மேல் ஒரு தட்டை வைத்து அதில் சாறு, மூடித் துருவல், முட்டைக் கரு, சர்க்கரை ஆகியவற்றை வைத்து கிரீமாக மாறும் வரை கலக்கவும்.

½ கப் சுடு நீரில் (கொதிநீர் அல்ல) ஜெலட்டினை இளக்கி, அதை லெமன் கலவையுடன் சேர்த்து, மில்க்மெய்ட் ஊற்றி கிரீமாகும் வரை கலக்கவும். முட்டை வெள்ளையை நன்கு அடித்து இந்தக் கலவையில் விடவும்.

ஒரு தட்டில் ஊற்றி, ஒரு ஃப்ரிஜ்ஜில் வைக்கவும்.



### மில்க்மெய்ட் பிர்னி

5 பேர்களுக்கு

**தேவை:**

1 டின் மில்க்மெய்ட், ½ லிட்டர் பால், 100 கி. அரிசி, ¼ தேக்கரண்டி கேவ்ரா எஸ்ஸென்ஸ், பருப்பு மற்றும் வெள்ளி ரேக்கு (விரும்பினால்)

**செய்முறை:**

அரிசியை நன்கு கழுவி முதல் நாளிரவே ஊற வைக்கவும். வடித்து விட்டு, சிறிது தண்ணீர் விட்டு நைஸாக அரைத்துக் கொள்ளவும். மில்க்மெய்ட், பால், அரைத்த அரிசி மாவு கலந்து கொதிக்க விடவும். லேசான வெப்பத்தில் விடாமல் கிளறி விட்டு கட்டியாக விடுங்கள்.

ஆற வைத்து கேவ்ரா எஸ்ஸென்ஸ் சேர்த்து தட்டையான பாத்திரத்தில் ஊற்றவும்.

நன்கு படிந்தவுடன் பருப்பு, வெள்ளி ரேக்கு கொண்டு அலங்கரிக்கவும்.

### மில்க்மெய்ட் சாக்லேட் பர்பி

8 பேர்களுக்கு

**தேவை:**

1 டின் மில்க்மெய்ட், 100 கி. உடைத்த பருப்புக்கள், ½ கப் கோக்கோ, 50 கி. வெண்ணெய், ½ கப் சர்க்கரை.

**செய்முறை:**

வாணலியில் மில்க்மெய்ட் ஊற்றி கூடவே வெண்ணெய், சர்க்கரை சேர்க்கவும். கோக்கோவும் பருப்பும் போட்டு இதமான சூட்டில் வாணலியில் பிடிக்காத வரை கிளறவும். வெண்ணெய் தடவிய தட்டில் சீராக ஊற்றி குளிரவிட்டு வில்லை போடுங்கள்.





### மில்க்மெய்ட் கோகனட் லட்டு

6-8 பேர்களுக்கு

**தேவை:**

250 கி. தேங்காய் பவுடர், 1 டின் மில்க்மெய்ட்.

**செய்முறை:**

50 கி. தேங்காய் பவுடரை தனியாக எடுத்து வைக்கவும்.

மீதியுள்ள தேங்காய் பவுடரை மில்க்மெய்டில் போட்டு, லேசான வெப்பத்தில் வாணலியின் பக்கத்தில் பிடிக்காத வரைகிளறி விட்டு காய்ச்சவும்.

ஆற வைத்து, கைகளில் வெண்ணெய் தடவிக் கொண்டு சின்ன லட்டு உருண்டைகளாக பிடிக்கவும். எடுத்து வைத்த தேங்காய் பவுடரில் இவற்றை உருட்டி எடுத்து பரிமாறவும்

# மௌனப் புயல்

30

"உன்னை நம்பலாமா ராதாகிஷன்?" என்றாள் ரஞ்சனி மகிழ்ச்சி கலந்த வியப்புடன். ஃபோனின் மறுமுனையில் ராதாகிஷன் சிரித்தான்.

"பத்திரிகைக்காரன் சொல்வதை நீ நம்ப மாட்டேன் என்கிறே பார்! பிரதம மந்திரியும் லோங்கோவாலும் ஒப்பந்தத்திலே கையெழுத்துப் போடற ஃபோட்டோ எடுத்திருக்கோம். நாளைக்கு முதல் பக்கத்தைப் பாரு!"

"ரொம்ப நல்ல நியூஸ்!" என்றாள் அவள் இன்னும் நம்ப முடியாமல். "யாரும் எதிர்பார்க்கல்லே இல்லே?"

"இத்தனை சீக்கிரம் வரும்னு எதிர்பார்க்கல்லே!"

"இது எனக்கு எத்தனை சந்தோஷத்தைக் கொடுக்கிறது என்று உன்னால் புரிந்து கொள்ள முடியாது ராதாகிஷன்!"

"நன்றாகப் புரிகிறது. உனக்குச் சீக்கியர்களிடம் தனிப்பட்ட அபிமானம் உண்டு என்று எனக்குத் தெரியும் ரஞ்சனி!" சட்டென்று அவள் யதார்த்தத்திற்கு இறங்கினாள்.

"கமான் ராதாகிஷன்! நீயும் கிண்டல் பண்ணாதே!"

"கிண்டல் எங்கே பண்ணினேன்? எங்கே உன் ஃப்ரெண்டைக் காணோம் ரொம்ப நாளாய்?"

அவளுக்குத் தொண்டை வறண்டது.

"தெரியாது" என்றாள் மெல்லிய குரலில்.

"வாட் டு யூ மீன்?"

"நிஜம்மா தெரியாது ராதாகிஷன். நவம்பர் ரயட்ஸுக்கப்புறம் அவனை நான் பார்க்கல்லே. அவனுக்கு என்னவோ மனசுக்கு ஆகிவிட்டதுன்னு நினைக்கிறேன்."

"இருக்காது ரஞ்சனி. இங்கே அவன் ஏதோ காலேஜிலே-லெக்சரரா வேலை பார்க்கல்லே?"

"அதை விட்டு விட்டுப் பஞ்சாபுக்குப் போயிட்டானாம். விலாசம் கொடுக்காம."

"உங்கிட்டயும் சொல்லல்லியா? நீங்க ரெண்டு பேரும் ரொம்பக் க்ளோஸ்னு நினைச்சேன்."

அவளுக்கு மறுபடி தொண்டையை அடைத்தது. கண்களில் நீர் துளிர்த்தது. தன் மீது கோபம் வந்தது.

"அதான் சொன்னேனே அவனுக்கு என்னமோ ஆகிவிட்டது!"

"ஐ ஆம் ஸோ ஸாரி!" என்றான் ராதாகிஷன். "கவலைப்படாதே. இனிமே சரியாயிடும். பஞ்சாப் பிரச்னை தீர்ந்தாப்போலே தான். அவனைப் போல் சோர்ந்திருக்கிற ஒவ்வொரு சீக்கிய இளைஞனும் இனிமேல் உற்சாகமாயிடுவான் பாரு. பயங்கரவாதிகள் எல்லாம் அடங்கிவிடுவார்கள்."

"என்றால் நம்ப முடியவில்லை ராதாகிஷன்!" என்றாள் அவள் பலவீனமாக.

"நீ ஒரு முட்டாள் பெண்! சில பேருக்குப் பிரச்னைகள் தீராமல் இருந்தால்தான் நிம்மதி!" அவள் மௌனமானாள்.

அவன் சமாதானமாகத் தொடர்ந்தான். "ஒன்னு செய்வோம் ரஞ்சனி! அங்கு எலெக்ஷன் நடந்தாக வேண்டும். தேதி சொல்லிவிடுவார்கள். பஞ்சாபில் ஜனங்களின் மூட் எப்படியிருக்கிறதென்று நேரில் பார்க்க நான் போவேன் ஒரு நாள் இரண்டு நாளைக்கு. வருவியா என்னோடு?"

சட்டென்று மனசு துள்ளிற்று.

"கண்டிப்பாய் வருவேன் ராதாகிஷன்!"

"உன் ஃப்ரெண்டைக் கண்டுபிடிச்சுடலாம், டோன்ட் வர்ரி. கிளம்பற போது உனக்குச் சொல்றேன்."

"தாங்க்யூ!"

ரஞ்சனி நிதானமாக ரிஸீவரைக் கீழே வைத்தாள். மார்பு வெகுவேகமாக அடித்துக் கொண்டது.

எத்தனை நல்ல செய்தி இது என்று மனசு கொம்மாளமிட்டது. இனிமேல் படிப்படியாக நிலைமை சீர்ப்பட்டுவிடும் என்று நிச்சயமாகத் தோன்றிற்று. அதிர்ச்சிகளைத் தாங்க முடியாமல் முக்காடிட்டுக் கொண்டு ஓடிப் போனவர்கள் கூடச் சற்றுத் தெளிந்து திரும்பி விடுவார்கள்.

அவளுக்கு மன்மோஹனை நினைக்கும் போதெல்லாம் வெட்கமில்லாமல் கண்கள் பனித்தன. அடக்க அடக்க அடங்காமல் மனசு உள்ளுக்குள் விம்மிற்று.

'முட்டாள்! முட்டாள்!' என்று அவன் மார்பில் முஷ்டியால் குத்தி முகத்தைப் புதைத்து அழ வேண்டும் போல் இருந்தது. உன் துக்கத்தில் பங்கு கொள்ளும் உரிமை எனக்குக் கொடுக்க ஏன் தயங்குகிறாய் என்று அவனை உலுக்க வேண்டும் போல் இருந்தது.

வாஸந்தி

என் ஜனங்கள் எதிர்ப்பார்கள் என்று? அதை நான் சமாளித்துக் கொள்ள...

அவள் சோர்வுடன் சுய நினைவுக்கு வந்தாள். சமாளிப்பது கஷ்டம்தான். ஊரிலே இருக்கிற, அவளுக்கு அதிகம் பழக்கமில்லாத பெரியவர்களுக்குப் பதில் சொல்லியாக வேண்டும் என்கிற சாக்கில் அம்மா தீர்மானமாக இந்த உறவுக்கு மறுப்பு சொல்வாள் சீக்கியன் என்கிற காரணத்தாலேயே அப்பா சம்மதம் கொடுக்க மாட்டார்.

ஆனால் இந்த மாதிரி உறவுகள் எவைதான் சுலபமாகச் சாத்தியமாகியிருக்கின்றன?

அடுத்து நகர்ந்த நாட்களில் தில்லி முழுவதும் இந்த உடன்பாட்டை முழு மனத்தோடு வரவேற்றது, யாருடன் பேசினாலும் தெரிந்தது. அப்பா புதிய பிரதமரை வானளாவப் புகழ்ந்தார். சுதந்திரத்துக்குப் பின் நிகழ்ந்திருக்கும் மிகப் பெரிய சாதனை என்றார்.

ரமேஷ் கூட அப்பாவுடன் வாக்கு வாதம் செய்யாமல் அடங்கியிருந்தான்.

ருமா பழையபடி அவளுடன் சேர்ந்து கல்லூரிக்குப் போக ஆரம்பித்திருந்தாள்.

''இந்த ஒப்பந்தத்தை மூன்று வருஷங்கள் முன்பே செய்திருந்தால் எத்தனை சோகங்களைத் தவிர்த்திருக்கலாம்?'' என்றான்.

பதில் ஏதாவது சொன்னால் ருமா பழையபடி தப்பாக நினைத்துக் கொள்வாள் என்று ரஞ்சனி வாயை மூடிக் கொண்டாள்.

கல்லூரிகளில் பாடங்கள் மும்முரமாக நடக்க ஆரம்பித்துவிட்டன. நாட்கள் வெகு வேகமாக நகர்ந்தன. மன்மோஹன் ஸிங்கிடமிருந்து ஒரு தகவலும் இல்லை. கவலையும் கோபமும்துக்கமுமாய்மனசுசஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கையில் ராதாகிஷணிடமிருந்து ஃபோன் வந்தது.

''நாளைக்கு நான் ஆபீஸ் வண்டியில் அமிருத்ஸர் போறேன், வர்றியா?''

''வரேன்!'' என்றாள் அவள் தயங்காமல்.

அமிருத்ஸர் என்றதும் அம்மா வழக்கம் போல் ஆட்சேபித்தாள். நல்லவேளையாக அப்பா அவளுடைய உதவிக்கு வந்தார்.



"இத்தனை நாள் அந்த சர்தார்ஜி பையனைக் காணோம்னு கொஞ்சம் நிம்மதியா இருக்கேன். அவன் பஞ்சாபுக்கே போயிட்டானாம். அவனைப் பார்க்கத்தான் இவ கிளம்பறாளோ என்னவோ!" என்று அம்மா கிசுகிசுத்தாள்.

"பார்த்துட்டு வரட்டுமே. குடியா முழுகிடும்?" என்று அப்பா அதட்டினார்.

ரஞ்சனி எதையும் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

அமிருத்ஸர் ஹோட்டலை அடைந்த போது சென்றமுறை சந்தித்த பத்திரிகையாளர் பாட்டியா லௌஞ்சில் உட்கார்ந்திருந்தார். அவளைப் பார்த்து உற்சாகமாகக் கையசைத்தார்.

"ப்ரீ எலெக்ஷன் பல்ஸைப் பார்க்க வந்தியா?" என்று சிரித்தார். "எங்கே உன் சிக்கிய நண்பன்?"

"இங்கேதான் எங்கேயோ இருக்கிறான். இப்பொழுது என்னைத் தேட ராணுவத்தை அனுப்ப மாட்டார்களே?"

அவர் பதில் சொல்லாமல் அவளை யோசனையுடன் பார்த்துச் சிரித்தார்.

"இப்பவும் நிலைமை நார்மல் என்று சொல்ல மாட்டேன். பயங்கரவாதிகள் அவ்வளவு சீக்கிரம் அடங்கிவிடுவார்களா என்ன? நீ இருட்டுவதற்கு முன் ஹோட்டலுக்கு வந்து விடுவது நல்லது!"

ராதாகிஷன் வெளியில் கிளம்பும் போது அவள் வழியில் குருசரன்ஸிங் வீட்டில் இறங்கிக் கொண்டாள்.

அவளைக் கண்டதும் குருசரன் கைநீட்டி வரவேற்று அணைத்தார். "நீ மன்மோஹனின் சினேகிதி இல்லே!" என்றார்.

"நீங்கள் முன்னைக்கு இப்போது உற்சாகமாக இருக்கிறீர்கள்" என்றாள் அவள் புன்னகைத்து.

"ஆ. ஆமாம். உடனடியான பிரச்னைகளுக்கு ஒரு தீர்வு ஏற்பட்டிருக்கிறது அல்லவா? அரசாங்கம் ரொம்பப் பெருந்தன்மையாக நடந்து கொண்டிருக்கிறது. நோ கம்ப்ளெயின்ட்ஸ்! அகாலிகளுக்குஇதுஒருபெரிய வெற்றிதான். பஞ்சாபில் எப்படியாவது அமைதி ஏற்பட்டால் சரிதான்."

"உங்களுக்குச் சந்தேகமாக இருக்கிறதா?"

அவர் தூரத்தில் பார்வையைப் பதித்தார்.

"என்னுடையவை வெகு தொலைவைப் பார்த்த பயங்கள். பயங்கரவாதம் இங்கு எப்படியோ வேரூன்றிவிட்டது. மதச் சார்புடைய ஒரு கட்சி, மதத்தின் பெயரில் செயல்படும் பயங்கரவாதிகளை முழுசாகவிலக்கமுடியுமா என்று எனக்கு பயம். ஹிந்து சீக் ஒற்றுமைக்கு இயல்பான ஒரு பாதை வகுக்க முடியுமா என்கிற பயம். ஆனால் மதத்தை வலியுறுத்த வேண்டியநிர்ப்பந்தம்அகாலிகளுக்கு — அவர்களுடன் ஓர் உடன்பாட்டுக்கு வரவேண்டிய நிர்ப்பந்தம் அரசுக்கு. பஞ்சாபின் சரித்திரமும் கலாசாரமும் பல நிர்ப்பந்தங்களினால் உருவானது. இன்றையச் சூழ்நிலைக்கு இந்த ஒப்பந்தம் சிறந்தது..."

அந்தப் பழுப்பு நிறக் கண்களில் ஓர் ஆழம் காண முடியாத சோகம் நிழலாடிற்று. மெல்லிய சிவந்த அதரங்களில் நெளிந்த புன்னகையில் ஒரு பரிதாபம் தெரிந்தது.

"மன்மோஹனுக்கும் இதே பயம்தான். நான் எத்தனையோ கண்ணால் பார்த்து அனுபவித்து விட்டதால் தாங்கிக் கொள்கிறேன். அவனுக்குச் சின்ன வயது. கஷ்டப்படுகிறான். நான் நாடகம் போட்டு ஜனங்களின் எண்ணங்களை மாற்றலாம்என்றுகனவு கண்டேன். அவன் சிறுவர்களுக்குப் பள்ளி நடத்தி ஒரு புது யுகத்தை உருவாக்கப் போவதாகக் கனவு காண்கிறான்."

"எங்கேயிருக்கிறான்?"

அவள் முகம் உணர்ச்சிவசப்பட்டுப் போனதை அவர் வியப்புடன் சில விநாடிகள்

## அருள் வாக்கு



ஆலய நிர்மாணம் என்றவுடனேயே சில்ப சாஸ்த்ரமும் வந்து விடுகிறது: லோகமே பிரமிக்கும் சில்பங்கள் எண்ணி முடியாமல் கொட்டிக் கிடக்கிற தேசம் இது. சித்த விகாரத்தை உண்டு பண்ணுவதற்கில்லாமல் சித்தத்தை சுத்தம்செய்வதற்காகதெய்வ ஸம்பந்தமாக்கப்பட்ட சில்பங்கள், **Cultural Heritage** (பண்பாட்டுப் பிதுரார்ஜிதம்) என்று இவற்றைப் புகழ்ந்து விட்டால் போதாது. சில்பிகளுக்கும் ஸ்தபதிகளுக்கும் ஊக்க உத்ஸாஹங்களைத் தந்து கௌரவப்படுத்தி, அவர்களிடம் பல பேர் போய்க் கற்றுக் கொள்ளத் தூண்டுதல் தர வேண்டும். இதைத் தெரிவிக்கவே ஆகம ஸதஸில் இவர்களையும் வரவழைத்து முக்கியத்துவம் தருகிறோம். நாங்கள் ஆரம்பித்தபின் ஈச்வரனும் கண்ணைத் திறந்து பார்த்ததில் (நாங்கள் ஆரம்பித்ததும் அவனுடைய அநுக்ரஹ பலத்தில்தான்!) நிறைய ஜீர்ணோத்தாரணப் பணிகள் நடந்து புதுப் புதுக் கோவில்களும் தினம் தினம் உண்டாகிக் கொண்டிருப்பதால் சில்ப சாஸ்திரத்துக்கும் அது தெரிந்த சில்பிகளுக்கும் சில்ப சாஸ்திர போதனைக்கும் கொஞ்சம் நல்ல தசை ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது.

**— ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

பார்த்தார்.

"இங்கிருந்து சற்றுத் தொலைவில் கொஹாலி என்று ஒரு கிராமம் இருக்கிறது. அங்கே 'நவயுக்' பள்ளிக் கூடம் என்றால் யார் வேண்டுமானாலும் சொல்வார்கள்."

மறுநாள் காலை அவனைப் பார்க்கச் செல்ல வேண்டும் என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

முன்னைவிட அமிருத்ஸர் தெருக்கள் கலகலப்பாக இருந்தன. சத்தம் போட்டுச் சிரித்துச் சில சர்தார்ஜிகள் பேசிக் கொண்டிருந்தார்கள். இன்னமும் கேசரித் தலைகள் காணப்பட்டன. ஆனால் நாள் செல்லச் செல்ல நிறம் மாறிவிடும் என்கிற நம்பிக்கை அவளுள் துளிர் விட்டிருந்தது. குருசரன் அதீதமாகக் கவலைப்படுகிறார் என்று அவளுக்குத் தோன்றிற்று. இந்த ஒப்பந்தத்தின் படி பஞ்சாபுக்கு ஏற்படப் போகும் பொதுவான நன்மைகள் நிச்சயம் இன வேற்றுமையைக் குறைக்கும். பயங்கரவாதத்தைப் பலஹீனமாக்கும்...

ஹோட்டல் லௌஞ்சில் யாரையும் காணாததால் அவள் தன் அறைக்குச் சென்று குளித்து உடையை மாற்றிக் கொண்டாள். கொண்டு வந்திருந்த புத்தகங்களைப் பிரித்துப் படிக்க முயன்றாள்.

கதவு தட்டப்படும் ஓசை கேட்டது.

அவள் விருக்கென்று எழுந்து கதவைத் திறந்தாள்.

ராதாகிஷன் முகமும் பின்னால் பாட்டியாவின் முகமும் தெரிந்தன. ராதாகிஷன் முகத்தில் அதிர்ச்சி தெரிந்தது.

"ரஞ்சனி! லோங்கோவாலைச் சுட்டுக் கொன்று விட்டார்கள்!"

"நோ!" என்றாள் அவள் விழிகள் பிதுங்க. "எப்பொழுது? எங்கே?"

"இன்று மாலை ஸங்க்ரூரில். இறந்து விட்டார் என்று இப்பொழுதுதான் செய்தி வந்தது!"

அவளுக்குத் தேகமெல்லாம் நடுங்கிற்று. குருசரன் ஸிங்கின் பயங்களின் புதிய பரிமாணங்கள் விசுவரூபமாய் எழுந்தன. இன்று மாலை வரை மனத்தில் துளிர் விட்டிருந்த எல்லா நம்பிக்கைகளும் நழுவிப் போனாற் போல் அவள் கண்களில் நீர் நிறைந்தது.

"இங்கு பிரச்னைகளுக்கு விடிவே இல்லை போலிருக்கு மிஸ்டர் பாட்டியா!" என்றாள் அவள் துயரத்துடன். "பயங்கரவாதம் இங்கு அடங்கவே அடங்காது போலிருக்கு!"

அவர் கனிவுடன் அவளுடைய தோளை அணைத்தார்.

"பஞ்சாப் பிரச்னை மிக ஆழமானது பேட்டி! பசைபோட்டு ஒட்டுகிற மாதிரி அதன் விரிசலைச் சுலபமாக ஒட்டி விட முடியாது. அதற்கு நாளாகும். ரொம்பத் தீவிரமா அதற்காகப் பாடுபடணும், நீயும் நானும் கூட! பிரச்னைகள் வரட்டுமே, பயங்கரவாதம் வாலை ஆட்டட்டுமே! நாம் சும்மா இருந்து விடுவோமா?"

அத்தனை சுலபமாக மனத்தை நிமிர்த்த முடியவில்லை. ராதாகிஷன் "டூ பேட்!" என்று தலையை அடிக்கடி நிராசையுடன் ஆட்டியதிலிருந்து அவனுக்கும் தாங்கவில்லை என்று புரிந்தது.



சிறுவன் : "இப்பொழுதெல்லாம் எங்கப்பா, புதுப்படம் ரிலீஸ் ஆனா உடனே போக விட மாட்டேங்கிறார், ரொம்ப நாள் கழிச்சுத்தான் போகணும்னு கண்டிப்பாய்ச் சொல்லிடறார்.

நண்பன் : "ஏண்டா, அப்படிச் சொல்றார்?"

சிறுவன் : "அரசாங்கத்துல வரிவிலக்குச் செஞ்சாலும் செய்வாங்க, அப்போ குறைந்த கட்டணத்திலே பார்க்கலாம்கிறார்."

— இரா. சம்பத்குமார்.

"காலையில் நான் ஸங்க்ரூருக்குப் போகப் போகிறேன். நீ வரியா?" என்றான் ராதாகிஷன்.

அவள் ஒரு விநாடி யோசனைக்குப் பிறகு சொன்னாள்.

"இல்லை. ஆனால் வழியில் என்னைக் கொஹாலி என்கிற இடத்தில் இறக்கிவிடு!" என்றாள்.

மறுநாள் காலை அவள் கொஹாலியை அடைந்த போது அந்தச் சிறிய கிராமத்திலும் ஒரு பரபரப்புத் தெரிந்தது. ஜனங்கள் முடிச்சு முடிச்சாக நின்று பேசிக் கொண்டிருந்தார்கள்.

நவ யுக் பள்ளிக்கூடத்தை ஒட்டினாற் போல் இருந்த ஒரு சிறிய வீட்டின் முன் கயிற்றுக்கட்டிலில் அமர்ந்தபடி மன்மோஹன் நாலைந்து பேர்களுடன் பேசிக் கொண்டிருந்தான். மறுபடி அவன் தாடி வளர்த்து டர்பன் கட்டிக் கொண்டிருந்தான்.

அவளுள் பிரவாகமாய் ஓர் உணர்வு பொங்கிற்று. குரல் வளையை அமுக்கிற்று.

அவன் எதேச்சையாகத் தலை நிமிர்ந்து அவளைப் பார்த்ததும் அவன் முகம் முழுவதும் மலர்வதை அவள் கவனித்தாள். அவன் சரேலென்று எழுந்து அவளிடம் விரைந்து வந்தான்.

"ரஞ்சனி எப்படி இங்கே வந்தே?" அவளுக்குக் கண்களில் நீர் நிறைந்தது. "எங்கிட்ட சொல்லாம தில்லியை விட்டு ஏன் வந்தே மன்மோஹன்?"

அவன் தலையைக் குனி[illegible] கொண்டான். "ஸாரி ரஞ்சனி. எனக்கு வேறே வழி தோணல்லே!"

"ஏன்? நான் உனக்கு அந்நியமாய் போயிட்டேனா? எனக்கு எப்படியிருக்கும்னு யோசிச்சுப் பார்த்தியா?"

"ஓ, காட்! நீ என்னைப் புரிஞ்சுக்கணும். எத்தனையோ விஷயங்களை என்னாலே தாங்

# டான்டெக்ஸ்®

# எகானமி

சிறப்புத்தரம்... உங்களுக்கு ஏற்ற விலையில்



ஆங்கிலேயர் காலத்தில் சென்னை அரசினர் கண் மருத்துவ மனையில் பணி புரிந்து வந்த எல்காட் என்னும் வெள்ளைக்கார டாக்டர் தமிழகத்தில் அப்போது பரவலாகவிளங்கிய கண்நோய்க்கான காரணம் பற்றி கண்டறிந்தார்.

சென்னையைச் சேர்ந்த டாக்டர் கண்டறிந்ததால் அந்த நோய்க்கு 'மெட்ராஸ் ஐ' என்னும் பெயர் வழங்க ஆரம்பித்தது.

சென்னை வானொலியில் கண் மருத்துவர் வேலாயுதம் சொல்லக் கேட்டவர்:

வி. ந. ஸ்ரீதரன்.



க்க முடியல்லே. என் மனசைக் கண்டே நான்பயந்தேன்.எனக்கும்உனக்கும்இடையே உணர்ச்சி ஆழமாப் போறதுக்கு முன் கிளம்பிடணும்னு முடிவு பண்ணினேன்!''

''ஏற்கெனவே ஆழமாப் போகல்லேன்னு உனக்கு எப்படித் தெரியும்?''

அவன் பதில் சொல்லத் தடுமாறினான்.

''ஸாரி ரஞ்சனி. அதுக்கு இடம் கொடுக்க எனக்கு இஷ்டமில்லே. என் முக்கியத்துவங்கள் இப்போ மாறிப் போச்சு. சாதாரண காலத்திலே நானே உங்கிட்ட வந்து கேட்டிருப்பேன். என் சொந்த ஆசைகளைப் பற்றி நினைக்க முடியாத நிலை இப்போது!''

அவள் தலையைக் குனிந்து கொண்டாள்.

''லோங்கோவாலுடைய கொலை உன்னை ரொம்பவும் பாதிக்கும்னு எனக்குத் தெரியும் மன்மோஹன்!''

''இந்தச் செய்தி எதிர்பார்த்தது ரஞ்சனி! என் தீர்மானம் ரொம்ப நாள் முன்பே ஏற்பட்டுப் போனது. பயங்கரவாதம் இங்கே அதிர்ச்சி தருகிற விதத்திலே வேர் பரப்பியிருக்கிறது. கிளைகள் விரித்துப் பிரச்னைகளில் விஷத்தைப் புகுத்த ஆரம்பித்திருக்கிறது.''

''இது ஒரு அரசியல் பிரச்னை மன்மோஹன்! பயங்கரவாதத்துக்கு இங்கே வெளிநாட்டு ஆதரவு இருக்கு. எத்தனை நாளைக்கு அதனுடைய ஆதரவு இருக்கும்?''

'எத்தனை வெகுளி நீ' என்கிற சிரிப்பை அவன் சிரித்தான்.

''என் மனைவி கெட்டுப் போனது பக்கத்து வீட்டுக்காரனால் என்கிற மாதிரி! தி பாயின்ட் இஸ், வாட் மேட் ஹர் கோ அஸ்ட்ரே?''

அவள் பதில் சொல்லாமல் நிற்கையில் அவன் தொடர்ந்தான்.

''நான் இங்கே சிறுவர்களை கவனிக்கிறேன். அவர்கள் கண்களில் ஒரு மௌனம் இருக்கிறது. ஒரு கோபம் நிழலாடுகிறது. இந்து, சீக், எல்லா குழந்தைகளிடமும் பார்க்கிறேன். எனக்குத் தேகமெல்லாம் நடுங்குகிறது ரஞ்சனி. இதை இப்பொழுது கட்டுப்படுத்தாவிட்டால் இது இன்னொரு புயலாக மாறலாம். நான்கு வருஷங்களாக இங்குஇருக்கும்புயலுக்குப்பின்னால்எத்தனை வருஷத்து மௌனக் கோபம் இருந்ததோ, யார் கவனித்தார்களோ? அல்லது கவனித்தும் அசட்டையாக இருந்தார்களோ!''

அவன் முகத்திலும் கண்களிலும் ஒரு பளபளப்புத் தெரிந்தது.

''இதற்காக நீ என்ன செய்யப் போறே, மன்மோஹன்?''

''இந்தச் சிறுவர்கள் மனசிலே புதிய நம்பிக்கைகளை ஏற்படுத்த நான் முயற்சி பண்ணப் போறேன். ஹிந்து சீக் என்கிற பேதமில்லாமல் — ஹிந்துக்களும் இங்கே நிறையக்கஷ்டப்பட்டிருக்கிறார்கள். நாளைக்கு அவர்களதுகுழந்தைகள்பயங்கரவாதிகளாய் மாறினால் ஆச்சரியப்படுவதற்கில்லை!''

ரஞ்சனி மெல்லிய குரலில் சொன்னாள்:

''நானும் உன்னுடைய இந்த வேலையில் உதவியாயிருப்பேன் மன்மோஹன். உனக்கு என் தோழமையைத் தரச் சித்தமாயிருக்கிறேன்.''

அவன் சட்டென்று தன் முகத்தை மறு பக்கம் திருப்பிக் கொண்டான். சற்றுப் பொறுத்துத் தன்னை நிதானப்படுத்திக் கொண்டவன் போல் திரும்பிப் பார்த்துச் சொன்னான்.

''ப்ளீஸ் ரஞ்சனி. என்னை மன்னித்துவிடு. நான் எந்தப் புதிய உறவையும் ஏற்கிற மனநிலையில் இல்லை. பஞ்சாபிலே கொலைகளைப் பற்றிச் செய்தி இருந்து கொண்டிருக்கிற வரைக்கும் என் பிரத்யேக வாழ்க்கை எனக்கு முக்கியமில்லே!''

''தன் கண்களில் நிரம்பப் பார்த்த நீரை அவள் சாமர்த்தியமாக மறைத்துக் கொண்டு சிரித்தாள்.

''அந்த நாள் வரை நானும் காத்திருப்பேன் மன்மோஹன்! எனக்கும் என் பிரத்தியேக ஆசைகள் முக்கியமில்லே!''

அவன்துயரத்துடன் அவளைப்பார்த்தான்.

''எனக்காக உன் வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது ரஞ்சனி!'' என்றான் மிருதுவாக.

''இது என் தீர்மானம் மன்மோஹன். இதற்காக உனக்கு எந்தவிதக் குற்ற உணர்வும் இருக்க வேண்டியதில்லே! பயங்கரவாதத்தைப் பற்றி உனக்கிருக்கும் கவலை எனக்கும் இருக்கு. நீ செய்கிற இயக்கத்தை நானும் என் எழுத்து மூலம் செய்யலாம்.''

அவள் அங்கு பிறகு நிற்காமல், திரும்பி அவனைப் பார்க்காமல் பஸ்ஸைப் பிடிக்க விரைந்தாள்.

திடீரென்று மனத்தில் ஒரு மூப்போ நிச்சலனமோ ஏற்பட்டாற்போல் ஒரு மௌனம் அமர்ந்தது. ஒரு வேள்விக்குத் தயாரானாற்போல் மேம்பட்ட நிலையில் நின்றது.

(முற்றும்)



# சபிக்கப்பட்டவர்கள்

**கே.கே. ராஜன்**

கிராமமே ஆலமரத்தடியில் கூடி நின்றது.

தொண்டுக் கிழவர்கள் கூடத் தங்கள் தள்ளாமையை மறந்து மரத்தின் ஓரமாகக் குத்துக்காலிட்டு அமர்ந்திருந்தனர். கைக்குழந்தைகள் அழும்போதெல்லாம் தாய்மார்கள் தங்கள் மாராப்பை விலக்கிக் குழந்தையை மார்பில் புதைத்து அழுகையை அடக்கிக் கொண்டிருந்தனர். கிராமத்து இளவட்டங்களெல்லாம் தங்கள் உடலில் ஓடும் இரத்தத்தின் வேகத்தைக் கட்டுப்படுத்திக் கண்கள் சிவக்க ஆல மரத்தடி மேடையில் அமர்ந்திருந்த பெரிய அம்பலம் பூமிநாதன் சேர்வையின் கட்டளைக்குக் காத்திருப்பது போல் அவரையே உற்று நோக்கியவாறு நின்றிருந்தனர்.

—மொத்தத்திலோர் இறுக்கமான மௌனம் அந்த இடத்தில் நிலவிக் கொண்டிருந்தது. பள்ளிக்கூட ஆசிரியர் நமச்சிவாயம்தான் அந்தமௌனத்தைக்கலைத்துப்பேச ஆரம்பித்தார். "அப்ப முடிவா நம்ம கிராமத்துக்கு ரோடு போட மாட்டாங்களாக்கும். பக்கத்து சுரைக்காய்பட்டிக்கு நல்ல தார் ரோடு போட்டாச்சு. நம்ம கிராமத்தை விட ஜனத்தொகை கம்மி. போன 'சென்ஸஸ்' அந்த ஊரில நான்தான் எடுத்தேன். மொத்தமே நூறு வீடு கூடச் சரியாத் தேறுது... ம் முடிவா எம். எல். ஏ. என்னதான் சொன்னாரு? விவரமாவே சொல்லுங்க," என்றார் பூமிநாத சேர்வையிடம்.

"விபரமா என்னத்தைச் சொல்லுறது. கலெக்டர் ஆபீஸில வைச்சுத்தான் நானும் கணக்குப் பிள்ளை சுடலைமுத்துவும் எம். எல். ஏ.வைப் பார்த்தோம். 'சுரைக்காய் பட்டி எங்க கிராமத்தை விடச் சின்னது. அதுக்குத் தார் ரோடு போட ஏற்பாடு பண்ணியிருக்கீங்க. எங்க கிராமத்துக்கும் போட உதவி செய்யுங்கன்னு கெஞ்சினோம். அதுக்கு அவரு எப்படி கோபமாக் குதிச்சாரு தெரியுமா? — 'உங்க கிராமத்துக்கு ரோடு போட முடியாது. சுரைக்காய்பட்டி கிராமத்தாலதான் இன்னிக்கு எம்.எல்.ஏ.வாயிருக்கேன். இன்னும்கிணத்து லோன், பாங்கு கடன் அது இதுன்னு உதவி செய்வேன். நீங்க வயிறு எரியணும்' அப்படி இப்படின்னு வாய்க்கு வந்தபடி பேசிட்டாரு.' என்றார் பூமிநாதன் சேர்வை.

உடனே கூட்டத்திலிருந்த ஒரு இளைஞன் முன் வந்து, "அந்த இடத்திலேயே அவனை வெட்டிட்டு வந்திருக்க வேண்டாம். தேர்தலைப் புறக்கணிச்சதுக்குப் பழி வாங்கப் போறானாக்கும் பழி! இப்ப சொல்லுங்க பொழுது விடியறதுக்குள்ள அவனைத் தேடிப் பிடிச்சு அவன் குடலை உருவி மாலை போட்டுட்டுக் கிராமத்துக்கு வரேன்," என்றான், ஆவேசத்தோடு.

"இளரத்தம் அப்படித்தான் துள்ளும். வயசாகி கண்டிருச்சுன்னா எல்லாம் நிதானப்பட்டுப் போகும். எம். எல். ஏ. குதிச்சதுக்கு நீங்க என்ன பதில் சொன்னீங்க?" என்று கேட்டார் நமச்சிவாயம்.

"நான் ரொம்ப பணிஞ்சு பேசினேன்.



போட்டிக் கதை: 10

ஐயா, அப்படிச் சொல்லக் கூடாது. அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி நடந்த தேர்தலில நீங்கதான் நின்னீங்க. எங்க கிராமத்துக்கு ஓட்டு கேட்க வந்தீங்க. ரோடு போடுறேன், சின்ன ஆஸ்பத்திரி கட்டித் தர்றேன்னு வாக்குக் கொடுத்தீங்க. ஏன், சூடத்தைக் கொளுத்திச் சத்தியம் கூடச் செய்தீங்க. எங்க கிராம மக்கள் உங்கள் பேச்சை தெய்வ வாக்காய் நம்பி ஓட்டை உங்களுக்கே போட்டாங்க. நீங்களும் ஜெயிச்சீங்க. அதுக்குப் பிறகு எங்க கிராமத்துப் பக்கம் தலை வச்சாவது படுத்திருப்பீங்களா? கிராமத்தில முடிவு எடுத்து எங்க எதிர்ப்பைத் தெரிவிக்கவே இந்தத் தேர்தலைப் புறக்கணிச்சோம். அதுக்காக 'பழி வாங்கப் போறேன்'னு எங்க கிராமத்து முன்னேற்றத்துக்கு நீங்க தடையாய் இருக்கலாமா?'' என்றேன். 'முடியாது' என்று சொல்லிப் போய்விட்டார்'' என்றார் பூமிநாதன் சேர்வை.

சிறிது நேரம் யாருமே பேசவில்லை. எல்லோர் மனத்திலும் தங்கள் கிராமம் பழிவாங்கப்படுகிறதே என்ற ஆதங்கம் இருந்தது. ஓட்டுப் போடாமல் தேர்தலைப் புறக்கணித்தால் அதிகாரிகள் வருவார்கள், அரசியல்வாதிகள் அனுதாபம் காட்டுவார்கள், வரிந்து கட்டிக் கொண்டு உதவி செய்ய முன்வந்து பட்டியல் போட்டுத் தந்த குறைகளைக் களைவார்கள் என்று நம்பியதற்கு இப்படிப்பட்ட தண்டனையா!

''சரி, நடந்தது நடந்திருச்சு. இனி ஆக வேண்டியதைப் பார்க்கவேண்டாமா. ஆளுங் கட்சி எம். எல். ஏ. தடையாய் நிற்குறான். இதைத் தகர்க்கணும். அதுக்கு வழி சொல்லுங்க'' என்றார் இவ்வளவு நேரமும் எதுவும்



பேசாமல்மேடையில் அமர்ந்திருந்தகணக்குப் பிள்ளை சுடலைமுத்து.

''சரி, இப்ப எனக்கு ஒரு யோசனை தோணுது. எதிர்க்கட்சித் தலைவரு நாளைக்கு டவுனுக்கு வராராம். ஏதோ கூட்டமாம். நானும் சுடலைமுத்துவும் போய்ப் பார்த்து ஆளும் கட்சி எம். எல். ஏ. செய்யுற கொடுமையை, ரோடு போட முட்டுக் கட்டையா விருந்து அதிகாரிகளை கைக்குள்ள போட்டு தான்தோன்றித் தலைவிரிச்சாடுகிற அரக்கத் தனத்தை எல்லாம் சொல்லுறோம்.''

கூட்டத்தில் சிறிதுநேரம் சலசலப்பு ஏற் பட்டது. ஒருத்தருக்கொருத்தர் ஏதோ பேசிக் கொண்டார்கள்.

பள்ளிக்கூட ஆசிரியர் நமச்சிவாயம் முன் வந்து பூமிநாதன் சேர்வையைப் பார்த்து, ''ஊர் பெரிய அம்பலம் நீங்க. உங்க பேச்சுக்கு இந்தக் கிராமம் கட்டுப்படும். நீங்க தீர்மானிச்சது மாதிரி நாளைக்கே போய் எதிர்க்கட்சித் தலைவரைப் பாருங்க.''

கூட்டத்திலுள்ளவர்களும் அதை ஆமோ தித்தனர்.

* * * * *

மறுநாள் காலைபூமிநாதன்சேர்வையும், சுடலைமுத்துவும் டவுனுக்குச் சென்று பிரயாணிகள் விடுதியில் எதிர்க்கட்சித் தலைவர் தங்கியிருப்பதை உறுதிப்படுத்திக் கொண்டு அவரைச் சந்திக்கச் சென்றனர்.

மூன்று மணி நேரத்துக்குமேல் காத்திருந்த பிறகே தலைவரின் தரிசனம் பூமிநாதன் சேர்வைக்கும், சுடலைமுத்துவுக்கும் கிடைத்தது.

உள்ளே ஒரு சோபாவில் எதிர்க்கட்சித் தலைவர் கம்பீரமாக அமர்ந்திருந்தார். அவர் கையில் அணிந்திருந்த மோதிரத்தின் வைரக் கற்கள் விளக்கு வெளிச்சத்தில் நீலமாய் இறைத்துக் கொண்டிருந்தன. சோபாவுக்குப் பக்கத்தில் தொண்டர்கள் அணிவித்த மாலைகள் கிடந்தன.

''ஐயா, நாங்க ஆவரம்பட்டியில இருந்து வர்றோம். எங்க தொகுதி எம். எல். ஏ. எங்க கிராமத்து மேல ரொம்பக் கோபமா இருக்காருங்க. அரசாங்க உதவி கிடைக்க விடாமல் தடை செய்யுறாருங்க.''

''உங்க தொகுதி எம். எல். ஏ. யாரு?'' இருவரும் பேரைச் சொன்னார்கள்.

''ஓஹோ... அவரா! துள்ளத்தான் செய்வாரு. அவரோட அரசியல் ஆரம்பம் எங்க கட்சியில்தான்! எங்க கட்சியால்தான் வளர்ந்தாரு. பணத்துக்காக ராவோட ராவா கட்சி மாறிய துரோகி! அடுத்த தேர்தலில நாங்க ஆட்சிக்கு வந்ததும் தொலைச்சுக் கட்டப் போற லிஸ்ட்டில இவர் பேரும் இருக்கு. அது சரி, உங்க கிராமத்து மேல இவரு ஏன் கோவமா இருக்கணும்?''

''நடந்த தேர்தலில எங்க கிராம முழுக்க யாருக்கும் ஓட்டுப் போடாம புறக்கணிச் சோம். அதுதான் கோபமா இருக்காரு. அதிகாரிங்க அவர் சொல்லுறபடி ஆடுறாங்க... ஐயாதான் சட்டசபையில் விளக்கமா பேசணும். ஐயாவை விட்டா வேறு வழி இல்லை.''

பூமிநாதன் சேர்வை இப்படிச் சொன்னதும் தலைவரின் முகம் வேறு விதமாக மாறியது. கண்களை இடுக்கிக் கொண்டு இருவரையும் பார்த்த பார்வையில் வெறுப்பும் அலட்சியமும் தோன்ற ஆரம்பித்தன. ''சட்டசபையில் பேசணுமாக்கும்! எங்களுக்குப் புத்தி புகட்டுவதா நினைச்சு தேர்தலைப் புறக்கணிச்சிருக்கேங்க. இப்ப கஷ்டப்படுறீங்க. இந்த விஷயத்தில நான் உங்களுக்கு உதவ விரும்பலே. நீங்க போகலாம்'' — படபட வென்று பேசிவிட்டு உள்ளே சென்று விட்டார்.

இவர்கள் வோட்டு கிடைத்திருந்தால், தன் கட்சி அத்தொகுதியில் ஜெயித்திருக்குமே என்ற ஆதங்கம் அவருக்கு.

எதிர்க்கட்சித்தலைவரைப்பார்க்கப்போனவர்கள் நல்ல சேதியோடு வருவார்கள் என்ற ஆவல் மாத்திரம் அனைவர் மனத்திலும் குடி கொண்டிருந்தது. நமச்சிவாய வாத்தியாரும் ஒரு தேவாரப் பாடலை மெல்லப் பாடியவாறு மேடை ஓரமாக அமர்ந்திருந்தார். தூரத்தே கண்மாய்க் கரை ஒற்றையடிப் பாதையில் பூமிநாத அம்பலமும், சுடலைமுத்துவும் வருவதை அவர்தான் முதலில் பார்த்தார். ''எழுந்திருங்கய்யா, ரெண்டு பேரும் வாராங்க. போன காரியம் பழமோ, காயோ'' என்றவாறு மேடையை விட்டு இறங்கி அவர்களை வரவேற்றார்.

பூமிநாத அம்பலத்தின் பரம்பரையினர் நெறிபிறழாத நேர்மையோடு சுத்தமான சொற்களோடு இந்தக் கிராமத்து மக்களைக் கட்டிக் காத்தனர். அந்த வம்ச வழியில் வந்த தன்னால் இந்தக்கிராமத்துக்கு எதுவும் செய்ய முடியவில்லையே என்ற வருத்தம் நெஞ்சை அமுக்கி வார்த்தைகளை வெளிவரச் செய்யாமல் அவரை மௌனமாக்கியது.

''நான் சொல்லுறதைக் கேளுங்க. நாளைக் காலையில நம்ம ஊர் ஆண்களெல்லாம் ஒண்ணாத் திரண்டு மெயின் ரோட்டுக்குப் போவோம். குறுக்கே வரிசையாய்ப் படுப்போம். போக்குவரத்தை ஸ்தம்பிக்கச் செய்வோம். அதிகாரிங்க வருவாங்க; போலீஸ் வரும். நம்மஒற்றுமையும்பிடிவாதமும்அரசை நம் பக்கம் இருப்பாமலா போய் விடும்? சாத்வீக வழியில் புரட்சி நடத்தகா சரித்திரத்தில்

* ஒரு புத்தகத்தைப் பார்த்துக் காப்பியடித்து எழுதினால் இலக்கியத் திருட்டு.

பல புத்தகங்களைப் பார்த்துக் காப்பியடித்து எழுதினால் இலக்கிய ஆராய்ச்சி!

சொன்னவர்: அமெரிக்க நாவலாசிரியர், ஆர்தர் மில்லர்.

—தகவல்: ஏ. கே. நாசர்.

# கலைகள் கொஞ்சிடும் தங்கச் சோலை!







## பொன்னும் வெள்ளியும் மின்னிடும் வேலை

**உம்மிடி பங்காரு கண்ணன் & சன்**

"ராணி சீதை" மண்டபம்,
ஜெமினி சர்க்கிள், 603, அண்ணா சாலை,
சென்னை-600 006.

போன்: **478727**


16.11.85 தீபாவளி இதழில்
பிரபல சரித்திர
நாவலாசிரியர்
கோவி. மணிசேகரன்
எழுதும்
திருமேனித்
திருநாள்
சரித்திரத் தொடர்
ஆரம்பம்...
ஜனரஞ்சனி
பல்சுவை
தமிழ் வார இதழ்
ORIENT/JR 406/TM
188, N.H. ரோடு கோயமுத்தூர்-641001 போன்: 33908

நிறையவே படிச்சிருக்கோமே! என்ன சொல்லுறீங்க'' — நமச்சிவாய வாத்தியார் ஆவேசமாகப் பேசியதில் அவர் உடல் ஆடியது.

பூமிநாத சேர்வை சிரித்துக் கொண்டே ''வாத்தியார் அவரோட உத்தியோகத்தை மறந்து பேசுறாருன்னு நினைக்கிறேன். நீங்க சர்க்கார் ஊழியர். மறியல் அது. இதுன்னு அரசாங்கத்துக்கு எதிரா சடுபட்டால் கோர்ட்டில் கேஸ் போட்டு வேலையைப் பறிச்சிடுவாங்க'' என்றார்.

''பெரிய வேலை......யிரு வேலை. இந்த ஊரில இருக்கிற எருமை மாடுகளை மேய்ச்சா என் பொண்டாட்டி, பிள்ளைகளுக்கு ஒரு வேளை கஞ்சி ஊத்தாமலா போய் விடுவீங்க?''

''கஞ்சி என்ன வாத்தியாரே கஞ்சி. நீங்க இந்தக் கிராமத்துக்குச் செய்த உதவிகளுக்கு காலம் காலமாய் உங்கள் குடும்பத்தைக் கண்ணில வைச்சுக் காப்பாத்தத் தயார். இருந்தாலும் மறியல் அது. இதுன்னு எடுத்த உடனேயே சிறுத்தையாய்ச் சீறி விழ வேண்டாம்.''

''அப்ப, நீங்களாவது ஒரு வழி சொல்லுங்க. இப்படியே பேசிக்கிட்டேயிருந்தா எப்படி?'' என்றார் கடலைமுத்து.

''வழி இருக்கு! அதைத்தான் இப்ப சொல்லப் போறேன். நாளைக்குக் காலையில தாலுகா ஆபீஸ் முன்னால உண்ணாவிரதம் இருக்கப் போறேன்.''

''உண்ணாவிரதமா!'' — ஆச்சரியத்தோடு அனைவரும் கேட்டனர்.

''கிராமத்து நல்ல காரியங்களுக்கு முதல் அழைப்பு எனக்குத் தர்றீங்க. கோயிலில முதல் மரியாதை எனக்குத்தான். நல்லதை அனுபவிச்ச நான் கிராமத்துக்கு ஒரு கஷ்டம் வந்தா முதலில் நிற்க வேண்டாமா. நாளை நான் மாத்திரம் உண்ணாவிரதம் இருக்கப் போறேன். இதில் மாற்றமில்லை. நீங்க எல்லோரும் போகலாம்.''

உறுதியாய்ச் சொல்லிவிட்டு அங்கிருந்து சென்றார் பூமிநாதன் சேர்வை.

மறுநாள் தாசில்தார் அலுவலகத்திற்கு முன்னால் போட்டிருந்த கொட்டகையில் பூமிநாத அம்பலம் அமர்ந்திருந்தார். கொட்டகைக்கு வெளியே மூங்கில் தட்டியில் 'நியாயம் கிடைக்கும் வரை உண்ணாவிரதம்' என்று எழுதப்பட்டிருந்தது. நமச்சிவாயமும், கடலைமுத்துவும் கொட்டகைக்கு வெளியே நின்று கொண்டிருந்தனர்.

பொதுவாக இந்த மாதிரி நேரங்களில், கூட்டமாக வந்து குறைகளை விசாரிக்கும் அரசியல்வாதிகள், எம். எல். ஏ. கோபத்திற்குப் பயந்து அந்தப் பக்கமே வரவில்லை. ஒரு சில யூனியன் தலைவர்களிடம் கடலைமுத்து நேரிலே சென்று விளக்கம் சொல்லியும் யாருமே வந்து பார்க்கவில்லை.

* * * * *

**அ**ன்று மாலை சுமார் ஐந்து மணிக்கு தாசில்தாரும் போலீஸ் இன்ஸ்பெக்டரும்



# திருட்டுக் கொடுத்த அனுபவம்

**போட்டி : 27**

உங்கள் வீட்டிலோ அல்லது நண்பர் வீட்டிலோ ஏதேனும் பொருள் அல்லது பொருள்கள் திருட்டுப் போயிருக்கலாம். அதைத் தொடர்ந்து வேடிக்கையான, ரசமான, சோகமான பின் விளைவு ஏற்பட்டிருக்கலாம். (கருத்து: ஜி. நீலா, மன்னார்குடி.) அதுபற்றிக் கீழே வெற்றிடத்தில் சுருக்கமாக எழுதி இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ். உறையின்மேல் ''திருட்டுக் கொடுத்த அனுபவம்'' என்று கண்டிப்பாகக் குறிப்பிடவும்.

**முடிவு தேதி : 18.11.85**

**வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெற்றால் 26 வி. ஐ. பி. ஸூட்கேஸ்களில் ஒன்றினைப் பெறும் வாய்ப்பு உங்களுக்கு நிச்சயம் இருக்கிறது! உம்... எடுங்கள் பேனாவை!**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

**வீ.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்**



❝ உங்களுக்கும் அனிதா போன்ற ஒரு மகள் இருந்தால்
என் கஷ்டம் புரியும்! எதற்கெடுத்தாலும்
அழுகை, ஆர்ப்பாட்டம், முரட்டுப் பிடிவாதம்!
சாப்பிடுவதிலும் அப்படியே. கறிகாய் பிடிக்காது. சப்பாத்தியைக்
கொறித்துவிட்டு மீதியைத் தன் செல்ல நாய்க்குட்டிக்குப் போடுவாள்.
கடிந்துகொண்டால் மூக்கின்மேல் கோபம் வரும்—
சாப்பிடாமலேயே எழுந்து போய்விடுவாள்.

இப்படி ஓட்டியடிக்கும் அனிதாவைப்பற்றி என் கணவரிடம்
புகார் செய்தால் "அனிதா உன்னையே பிடிவாதத்தில்
கொண்டுவந்திருக்கிறாள்!" என்று சொல்லிச் சிரிக்கிறார்!

அதுவும் உண்மைதான்!

எனக்கும் நான் இஷ்டப்பட்டதுதான் கிடைக்கவேண்டும்.
துணிமணிகள் வாங்குவதானாலும் சரி, அனிதா அடம் பிடித்துக்
கேட்கும் பொருட்களானாலும் சரி,
எனக்குத் திருப்தியானதையே வாங்குவேன்.

நான் பாத்திரங்கள் வாங்கும்போது அவை சேலம் எவர்சில்வரில்
செய்ததுதானா என்று குறிப்பாகக் கேட்டு வாங்குவேன்.
சேலம் எவர்சில்வரில் செய்த பாத்திரங்களில் கரும்புள்ளிகளோ,
கறையோ பிடிக்காது. வருடக்கணக்கில் உழைத்தாலும் பளபளப்பு
போவதில்லை. வாழ்நாளுக்கும் உழைக்கக் கூடியவை.

பாத்திரப் பிரச்சினையை சுலபமாக சமாளிக்கலாம்
—ஆனால் அனிதாவை? ❞

சேலம் எவர்சில்வரிலும்
தயாரிக்கப்பட்ட பாத்திரங்கள்
எல்லா பிரபலமான
பாத்திரக்கடைகளிலும் கிடைக்கும்.

**சேலம் எவர்சில்வர்.**
**நம்பிக்கைக்குப் பாத்திரமான பாத்திரங்கள்.**



சேலம் உருக்காலை

Sista's - SSP.365.85 TM G

அங்கு வந்தனர்.

தாசில்தார் பூமிநாத சேர்வையிடம், ''உங்க ஊர் விஷயமா கலெக்டருக்குப் ஃபோன் பண்ணிக் கேட்டேன். அவரு எல்லா ஏற்பாடுகளும் செய்யுறேன்னு சொல்லிட்டாரு. நீங்க உண்ணாவிரதத்தைக் கைவிட்டுட்டு ஊருக்குப் போகலாம்,'' என்றார் அலட்சியமாக.

களைப்போடு கொட்டகைப் பந்தலில் சாய்ந்திருந்த பூமிநாத சேர்வை சீறி எழுந்தார். ''கலெக்டரு எல்லா ஏற்பாடுகளும் செய்யுறேம்னு சொல்லிட்டாராக்கும். இதே கலெக்டரிட்ட ரோடு போடச் சொல்லி கிராமத்து ஜனங்க அத்தனை பேரும்கையெழுத்துப் போட்டு மனு எழுதிக் கொடுத்தோம். ஒண்ணு, ரெண்டா... கணக்கே இருக்காது. சப்பாத்தி முள்ளும், நெருஞ்சிச் செடியும் நிறைஞ்ச காட்டு வழியே அவரு பிள்ளைங்க தினமும் அஞ்சு மைல் நடந்து பள்ளிக்கூடம் போனா எங்க கஷ்டம் புரியும். எங்க கிராமத்தை நோக்கி ஜல்லிக் கற்களும், தார் டின்களும் போகணும். நாளைக்கே ரோடு போட ஆரம்பிக்கணும். அந்தச் செய்தி கிடைச்சவுடனதான் இந்தப் பூமிநாத சேர்வை உண்ணாவிரதத்தைக் கைவிடுவான், இது சத்தியம்!'' — உணர்ச்சி வசப்பட்டுப் பேசியதால் அவர் உடல் நடுங்கியது.

தாசில்தார் அவர் அருகில் நின்று கொண்டிருந்தஇன்ஸ்பெக்டரிடம்ஏதோசொன்னார். உடனே அந்த இன்ஸ்பெக்டர் முன் வந்து, ''இதோ பாருங்க, சட்டப்படி உங்களைக் கைது பண்ணி உள்ளே தள்ள முடியும். போனாபோகட்டும்னு பார்க்கிறேன். பிரச்னை பெரிதாகி அடிதடி வாங்கணும்னா உண்ணாவிரதம் இருங்க. கலெக்டர்தான் உங்க கிராமத்துக்கு ரோடு போட ஏற்பாடு செய்யுறேன்னு சொல்லிட்டாரே. உடனே லாரி நிறைய ஜல்லி, தார் டின் அது இதுன்னு அனுப்பிச்சிட முடியுமா?'' என்றார் கோபத்தோடு.

''இன்ஸ்பெக்டரய்யா, உடனே ஏன் அனுப்ப முடியாது? அதிகாரிங்க நினைச்சா முடியும். திடீர்னு ஒரு கிராமத்துக்குக் கட்சிக் கொடி ஏத்த மந்திரி வரப் போறாருன்னு செய்தி கிடைச்சதும் ராவோடு ராவா ரோடு போடுறீங்களே அது எப்படி?''

பூமிநாதன் சேர்வை பேசி முடிப்பதற்குள் திடீரென்று ஒரு கல் வந்து அவரது தலையைத் தாக்கியது. என்ன நடக்கிறதென்று நினைப்பதற்குள்ளேயே பல கற்கள் சரசரவென்று அவரைத் தாக்கின. நமச்சிவாயமும் சுடலைமுத்துவும் பாய்ந்து உள்ளே சென்று தலையிலிருந்து இரத்தம் பெருக்கெடுத்தோட கீழே விழுந்து கிடந்த பூமிநாத சேர்வையை மடியில் கிடத்தினர்.

நமச்சிவாயம் தன் துண்டைக் கிழித்துப் பொங்கி வரும் இரத்தத்தைக் கட்டுப்படுத்த பூமிநாத சேர்வையின் தலையில் கட்டினார். ''டாக்டர கூப்பிடுங்க, ஐயோ, கண்விழி மேல செருகுதே! டாக்டரைக் கூப்பிடுங்களேன்,'' — கதறினார் சுடலைமுத்து.

இன்ஸ்பெக்டர் எதுவும் பேசாமல் அங்கே நின்றிருந்த மோட்டார் சைக்கிளில் ஏறிச் சென்றுவிட்டார். தாசில்தாரையும் அவ்விடத்தில் காணவில்லை.

''உண்ணாவிரதம் இருக்கானும் உண்ணாவிரதம். பெரிய பெரிய திமிங்கிலங்களையே விழுங்கி ஏப்பம் விட்ட எனக்கு இவன் ஒரு சுண்டைக்காய். கல்லெறி பட்டுச் சாகணும்னு அவன் தலையில் எழுதியிருக்கு. செத்தான்.'' — மாடத் தெருவிலுள்ள ஒரு வீட்டில் யாரோ ஒருவர் போதையில் புலம்பிக்கொண்டிருந்தார்!



# ஏமாற்றாதே ஏமாறாதே

வழக்கம் போலத்தான்!

வேலை தேடித் தங்கையோடு சென்னை வந்து சேரும் நாயகன். ஊரில் இருக்கும் சில பெரிய புள்ளிகளின் ஆர்ப்பாட்டம். தங்கை கற்பழிக்கப்பட்டுக் கொலை. தங்கையின் காதலனுக்குக் கத்திக் குத்து. நியாயம் கேட்டு அண்ணன் போலீஸ் ஸ்டேஷன் போக, விலைக்கு வாங்கப்பட்ட இன்ஸ்பெக்டர் கைவிரிக்க, அண்ணன்காரன் மிகப் பெரிய போலீஸ் அதிகாரியிடம் போய்த் தன் குமுறல்களைக் கொட்ட, அவர் அந்த அண்ணன்காரனுக்கு — ஷ்! சஸ்பென்ஸ்!

டுமீல், டுமீல், டுமீல்—துப்பாக்கிகள் வெடிக்கின்றன.

டிஷ்யூங், டிஷ்யூங், டிஷ்யூங் — குத்துகள் பரிமாறப்படுகின்றன.

ஜலங், ஜலங், ஜலங்—முக்கால்நிர்வாணக் கால்கள் ஆடுகின்றன.

இதுதான் கதை! கடைசியில் நாயகனின் பழிவாங்கல் படலம் முடிந்தவுடன் சுபம்.

விஜய்காந்த்தான் இன்ஸ்பெக்டர்—கம்—ஹீரோ. சிவப்பு, வெள்ளை, கருப்புச் சட்டைகளுடன் கைதூக்கியெல்லாம் பாடுகிறார். தங்கை செத்துப் போனதற்காக ஒரு சொட்டுக் கண்ணீர்? ஊஹூம். பெண்களுக்காக என்று வைத்திருந்த விக்கை எடுத்து இவருக்கு மாட்டி விட்டார்கள் போலும். துவக்கத்தில் அதைப் பார்க்கும் போதெல்லாம் சிரிப்புத்தான் வருகிறது.

அர்ச்சனா ஹீரோயின். பாலுமகேந்திரா படங்களில் மட்டும் அழகாய் இருப்பாரோ என்னவோ? இதில் இல்லை. சும்மா கையைக் காலை ஆட்டுவதோடு சரி. கொஞ்சமாவது நடிக்க முயற்சி பண்ணியிருக்கலாமோ?

கடைசிக் காட்சிகளில் எலும்புக் கூடுகள், சவ அறைப் பிணங்கள் என்று முகத்தில் பூச்சாண்டி உறையை மாட்டிக் கொண்டு உறுமும் குழந்தை போலச் செய்து காண்பித்தாலும், 'விஜயகுமார், விஜயகுமார் இல்லை' என்று சொல்கிறார்கள் பாருங்கள்; இந்த நூற்றாண்டின் சினிமா உலகின் மகத்தான திருப்பம்!

விஜயகுமார் படுபாவமாய் இருக்கிறார். அவர் முகத்திற்கு வில்லத்தனமும் சரியில்லை; ஹீரோ ரோலும் ஒட்டவில்லை. என்ன செய்யலாம்?

டி. எம். எஸ். குரலை நீண்ட நாட்களுக்குப் பிறகு கேட்க முடிகிறது. குரல் நன்றாகத்தானே இருக்கிறது. ஏன் மார்க்கெட் இல்லை?

படத்தின் தலைப்பிலேயே ஏமாறாதே என்று சொல்லிவிட்டார்கள். புதிதாக நாம் வேறு சொல்ல என்ன இருக்கிறது? ம்?

—ஜெயமன் மதன்.

# காலைப் புதுமை மாலைவரை நீடிக்கச் செய்யுங்கள்!

புதியது







__உண்மையான__ புத்துணர்ச்சி. மற்ற சோப்புகள் தரும் குறைந்த நேர புத்துணர்ச்சி அல்ல. நாள் முழுவதும் உடலின் வியர்வை நாற்றமின்றி திகழும் புத்துணர்ச்சி! புதிய ஸின்த்தால் மட்டுமே அதனைத் தரவல்லது. இப்போது, ஒரு புதிய அற்புத நறுமணம் ஸின்த்தாலில் உள்ளது.

மேலும் அதன் சக்திவாய்ந்த வியர்வை துர்நாற்றம் போக்கும் தன்மை, சரும கிருமிகளை ஒழித்து உங்களை நாள் முழுவதும் நாற்றமின்றி புத்துணர்ச்சியுடன் வைத்திடும்.

**ஸின்த்தால்** மட்டுமே

உங்களை புத்துணர்ச்சியுடன் வியர்வை நாற்றமின்றி நாள் முழுவதும் வைத்திடும்.

Godrej

மின்னும் மேனி
மெருகுக்கு ரெக்ஸோனு




மின்னி மிளிரும் மேனி...
என்னுளும் உங்கள்
பொன்னுன கனவு...நிறைவேற
வரமளிப்பது ரெக்ஸோனு.

சரளம், கருவா, கிராம்பு,
ஹுபுஷா (தேவதாரம்) ஆகிய
நாலு வகை இயற்கைத்
தைலங்களின் கற்கலவை
யான ரெக்ஸோனு...சருமப்
பராமரிப்பிற்கு இயல்பான
வழியாகும்.

**ரெக்ஸோனு** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மினிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM

திருமணமாகி ஆறு மாதங்கள்தான் ஆகின்றன. நிர்மலா—செல்வராஜ் தம்பதி என்னென்ன சினிமா பார்த்தார்கள்? எத்தனை புடவை வாங்கிஞர்கள்? எந்த ஊர்களெல்லாம் போய் வந்தார்கள்? இதில் எந்தக் கேள்விக்கும் பதில் கிடைக்காது இவர்களிடமிருந்து. காரணம் — இந்தத் தம்பதிகளுக்கு ஒரு வித்தியாசமான கலைத் திறனே பொழுது போக்கு.

செல்வராஜ் அரிசி, சிலேட்டுக் குச்சி, சாக் பீஸ், கல், மரம், வெள்ளை எருக்கன் வேர் போன்ற பல பொருள்களையும் செதுக்கி அழகிய தெய்வ உருவங்களை வடிப்பவர். இயற்கைக் காட்சிகளையும், அரசியல் தலைவர்களையும்ஓவியம்வரைவதிலும்இவர்கைதேர்ந்தவர். 27.3.85 அன்று இவருக்குத் திருமணமாயிற்று.

புது மணப்பெண் நிர்மலா கணவர் செதுக்கிய வடிவங்களின் அழகில் சொக்கிப் போனதோடு நின்று விடாமல் அவற்றைப் போல் தானும் செய்ய வேண்டும் என்று துடிப்புடன்



* மஞ்சளில் வடித்த விநாயகர்.

# மங்கல மஞ்சளில் தெய்வச் சிற்பங்கள்!



* அனுமான்.

செயல்படலாஞர். கணவனிடமிருந்து தன்னைச் சற்றே வித்தியாசப்படுத்திக் கொள்ள அவர் புதிய பொருள் ஒன்றைத் தேர்ந்தெடுத்தார். பெண்களுக்குமங்களம் தரும்மஞ்சளைக்(வங்காள மஞ்சள்)கொண்டு தெய்வ உருவங்கள் செதுக்க ஆரம்பித்தார்.

ஆரம்பத்தில் பத்து, பன்னிரண்டு மஞ்சள் கிழங்குகள் வீணுயின. முதல் முறையாக ஓர் உருவத்தை முழுதாய் வடித்ததும் அவருக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை. விஞயகர், ஹனுமான், காமாட்சி அம்மன், முருகன், துர்க்கை என்று இப்போது நாளொரு வடிவம் வடித்துக் கொண்டிருக்கிருர். சிரத்தையுடன் செய்தால் ஒரு 'மினி' சிலை செய்ய இரண்டு மணி நேரம்தான் ஆகும் என்கிருர். நகாசு வேலை

* நிர்மலா — செல்வராஜ்.



நிறைய இருந்தால், கூடுதல் நேரம் தேவைப்படும். வெள்ளை எருக்கன் வேரில் சிலைசெய்ய ஒரு நாள் முழுதும் ஆகுமாம். வேலைப்பாட்டின் நுணுக்கத்தைப் பொறுத்துக் குட்டிச் சிலைகளை 25 முதல் 100 ரூபாய் வரை விலைக்கு விற்கிருர்.

செல்வராஜுக்கு இந்தக் கலைத் திறன் எப்படி வந்தது? பாரம்பரியத் திறமை இல்லை' என்கிருர் அவர். இயல்பான ஆர்வம் காரணமாகச் சுயமாகப் பயின்ற கலைதான். நாச்சியார் கோயில் அருகே மாத்தூர் கிராமத்தில் பிறந்தஇவருடைய குறிக்கோள் உலகம்வியக்கும் வண்ணம் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற வேண்டும் என்பதே! மனைவிக்கும் அந்தப் பெருமை கிடைக்க வேண்டும் என்று அனைத்து வழிகளிலும் நிர்மலாவை ஊக்குவித்து வருகிருர். இந்த ஆண்டு இறுதிக்குள் பாண்டிச்சேரியிலும் சென்னையிலும் கண்காட்சி நடத்திவிட வேண்டும் என்று முயன்று கொண்டிருக்கிருர்கள் இத் தம்பதிகள். விரும்புவோருக்கு இக்கலை யைச் சொல்லித் தரவும் இவர்கள் தயார்.

இவர்கள் படைப்பில் லேட்டஸ்ட் — இந்திரா காந்தி, மற்றும்ராஜீவ் காந்தி உருவங்கள். இவற்றைப் பிரதமருக்கு அனுப்பி வைக்கப் போகிருர்களாம்.

—அலமு



பருவத்தின் எல்லையில் என் பாசத்துக்குரிய மகள், சங்கடமான இந்தக் காலகட்டத்தில் அந்த இளம் உள்ளம் படும் வேதனை, தாயாகிய எனக்குத் தான் புரியும்.

# “என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித் தர நான் முடிவு செய்தது ஏனென்றால்”..

ஒரு சிறுமியின் வாழ்க்கையில் அவள் வயதுக்கு வரும் காலகட்டம் தவிர்க்க முடியாத ஒன்றாகும். பயமும், வெட்கமும், தவிப்பும் நிறைந்து, உடலளவில் மட்டுமின்றி மனத்தளவிலும் அவள் பாதிக்கப்படும் நேரமும் அதுதான்.

நான் ஒரு தாய். இந்தக் கால கட்டத்தை அனுபவித்தவள். அதன் சிரமங்களை நன்கு உணர்ந்தவள். குறிப்பிட்ட அந்த ஐந்து நாட்களும் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஏற்படும் சங்கடமும் தொல்லையும் எனக்கு நன்றாகவே தெரியும்.

**இத்தனை வருடங்களாக, சானிடரி பாதுகாப்புக்குத் தேவையானதை நான் வீட்டிலேயேதான் தயாரித்துக் கொள்வேன். அது மிகவும் தர்மசங்கடமான வேலைதான்!**

மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதற்காக நன்றாகத் துவைத்து, காயப்போட்டு.. போதும் போதும் என்றாகி விடும். அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்குக் கூட நமது 5 நாள் பிரச்னை விளம்பரப்படுத்தப்பட்டு விடும். இத்தனை அவஸ்தைப் பட்டாலும்,

நமக்குத் தேவையான சானிடரி பாதுகாப்பு கிடைக்குமா என்பதும் நிச்சயமில்லை. அது மட்டுமல்ல; எப்போது எந்த அசம்பாவிதம் நடந்து அவமானப்பட வேண்டி வருமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டே இருக்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில் இதிலெல்லாம் ஓரளவு பழக்கப்பட்டுவிட்டேன் என்றே சொல்லலாம். தவிர, அந்தக் காலத்தில் சங்கடமான அந்த 5 நாட்களில் பெண்கள் வெளியே போவது என்கிற வழக்கமெல்லாம் அறவே கிடையாது.

**ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது... பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில்கூட துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.**

ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. இப்போது கேர்ஃப்ரீ போன்ற நவீன சானிடரி பாதுகாப்பு கிடைக்கும் இந்த நாளில், என் மகளும் நான் இளம் பெண்ணாக இருந்ததைப் போலவே ஏன் வீட்டிற்குள் அடைபட்டுக் கிடக்கவேண்டும். நான் வளர்ந்த காலம் வேறு. என் மகள் வளரும் சூழ்நிலை வேறு இன்றைய சிறுமிகள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட துடிதுடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.

என் மகளைப் பாருங்களேன். அவள், நான் இளம் பெண்ணாக இருந்த காலத்தில் செயல்பட்டதைவிட மிக...மிக சுறுசுறுப்புடன் செயல்பட வேண்டியிருக்கிறது...படிப்பு விஷயத்திலும் சரி, இதர வேலைகளிலும் சரி. நாங்கள் இருந்ததைப் போல என் மகளையும் வீட்டிற்குள் முடக்கிப்போட நான் விரும்பவில்லை.

அதனால்தான் நான் கேர்ஃப்ரீயைத் தேர்ந்தெடுத்தேன். என் மகளின் துடிப்புக்கும் துள்ளலுக்கும், ஆட்டத்துக்கும் ஓட்டத்துக்கும் ஈடு கொடுக்கும் இணைபிரியாத் தோழி கேர்ஃப்ரீ.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். துணியையும் பஞ்சையும் வைத்து மடித்து, நேரத்தை வீணாக்கும் தொல்லை கிடையாது.

நான் அந்தக் காலத்தில் செய்தது போல என் மகள் துவைத்து, காயப் போட்டு, சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையான நேரத்திலே சட்டென்று புத்தம் புதுசாக, சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம்.

ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். முதலில் எனக்கு இத்தகைய ரெடிமேட் நாப்கின்மீது கொஞ்சம் அவநம்பிக்கை இருக்கவே செய்தது. ஆனால், இப்போது என் மகள் மாசாமாசம் கேர்ஃப்ரீ பயன்படுத்தி மகிழ்ச்சியோடு இருப்பதைப் பார்த்ததும் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தேவையான சானிடரி பாதுகாப்புக்கும், அசம்பாவிதம் எதுவும் நடக்காமல் தடுக்கவும் சானிடரி நாப்கின் பெரிதாக, கனமாக இருக்க வேண்டும் என்று நான் எண்ணி வந்தது தவறு என்பது இப்போது விளங்குகிறது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் சுகமாகவும் பாதுகாப்பாகவும் உணர்வதாக என் மகளே சொல்கிறாள். பயமின்றி, கவலையின்றி வெளியே சுற்றவும் முடிகிறது என்றும் கூறுகிறாள். அப்பாடா! எனக்கு ஒரு கவலை விட்டது.

**கேர்ஃப்ரீ பயன்படுத்துவதில் சிரமமோ சிக்கலோ எதுவுமே கிடையாது. இதனாலேயே என் மகளுக்கு எந்த விதமான பிரச்னையும் இல்லை. அதைக் குறித்து நான் சந்தோஷப்படுகிறேன்.**

எனக்குக் கிடைக்காத ஒரு சுதந்திரமும் பாதுகாப்பும் கேர்ஃப்ரீ மூலம் என் மகளுக்குக் கிடைத்திருப்பதைப் பார்த்துப் பூரிப்படைகிறேன். ஒரு பெண்தான்—அதுவும் ஒரு அன்னைதான்—என்னுடைய மன உணர்வுகளைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

காலத்தோடு நாமும் மாறியாக வேண்டும். அதுவும் நமக்கு அதிக சுதந்திரமும் பாதுகாப்பும் தருகிற கேர்ஃப்ரீ வடிவிலே அந்த மாற்றம் இருக்குமானால், அதை நாம் வேண்டாம் என்று ஒதுக்குவானேன்?




கிடைக்கிறது, 10 உள்ள பேக் மற்றும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்குகளிலும்

தனியாகவும் கிடைக்கிறது. கேர்ஃப்ரீ

கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்கள்—பூரண சுகம், பரிபூரண பாதுகாப்பு—மாறுகின்ற காலத்துக்கேற்ற மகத்தான வசதி.

Johnson & Johnson

OBM/5070/R2/TAM

# உணர்வுகள் உறங்குவதில்லை

## 14. கவர்ச்சி ராணியின் கவலைகள்!

இரண்டு நாட்களாகப் பரணியின் மனம் அலைபாய்ந்து கொண்டிருந்தது. எந்தப் பெண்ணைக் கண்டாலும் அவனுடைய பார்வைக்கு விரசமாகவே தோன்றியது. கல்லூரிக்குச் சென்று இந்த நினைவிலிருந்து விடுபடலாம் என்றால், அங்கு ஸ்டிரைக் நடைபெறுகிறது. எதிலும் மனம் செல்லவில்லை. குறிக்கோள் இல்லாமல் ஊரைச் சுற்றினான். மாலையில் வீட்டிற்கு வந்து நாற்காலியில் சாய்ந்து கிடந்தான்.

மனத்தைக்கட்டுப்படுத்தஇயலாமல்தவித்தான். கடவுள்தான் தன்னைச் சோதிக்க அப்படி ஒரு சந்தர்ப்பத்தை உண்டு பண்ணி விட்டார் என்று நினைத்தான் —

"ஐயோ! கடவுள் என்னைச் சோதிக்கிறார். தோற்றுப் போகக் கூடாது. உண்மையிலேயே ஒரு பெண் இப்போது எனக்கு எதிரே வந்து ஆடை குறைவுடன் நின்றால் கூட என் மனம் சலனப்படாது. நான் நைஷ்டிகப் பிரும்மசாரி."

"கண்களை மூடித் தலையைப் பிடித்துக் கொண்டு என்ன தவம் செய்கிறாய்?" என்ற குரலைக் கேட்டுப் பதறிப் போய் எழுந்தான்.

எதிரே ராதா சிரித்தபடி நின்று கொண்டிருந்தாள். பரணிக்கு மனம் கூசியது.

"எதையோ நினைத்துக் கொண்டிருந்தேன். திடீரென்று உங்கள் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு விட்டேன்."

"எதை நினைத்துக் கொண்டிருந்தாய்?" என்று ராதா கேட்டாள்.

"சௌந்தர்யலஹரியைப் பற்றி," என்று கூறியபடியே அவளை உற்று நோக்கினான். இரண்டு தினங்களுக்கு முன்பு கண்ட காட்சி இப்போது ராதாவின் உடலில் தெரிந்தது. காணக் கூசியவனாய்ப் பார்வையைத் திருப்பினான்.

"சௌந்தர்யலஹரி முழுவதும் உனக்குப் பாடமா?" என்று ராதா கேட்டாள்.

"அநேகமாக எல்லாமே மனப்பாடந்தான்."

"லலிதா ஸஹஸ்ரநாமம்?"

"அதுவும் தெரியும்."

"அர்த்தம் தெரியுமா?"

"ஓ. பாஷ்யம் முழுவதும் படித்திருக்கிறேன்."

"அதுபற்றிச் சிந்தித்திருக்கிறாயா?"

"என்ன சிந்தனை?"

"அம்பாளைப் பற்றிய வர்ணனைகளைப் பற்றி?"

"அம்பாளின் சௌந்தர்யம் பிரமாதமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதுபற்றிச் சிந்திக்க என்ன இருக்கிறது?" என்றான் பரணி அலட்சியமாக.

"சில வர்ணனைகள் விரசமாகப் படவில்லையா? ஒரு காவியக் கதாநாயகியின் அந்தரங்க அழகையெல்லாம் கவிஞன், காவிய நயத்திற்காக வர்ணிப்பது போலல்லவா வர்ணித்திருக்கிறார்கள்!" என்றாள் ராதா.

"தினமும் இவைகளைப் பாராயணம் செய்கிறேன். ஆனால் இப்போதுதான் இந்தச் சிந்தனையே வருகிறது. சந்திரன் சாரிடம் கேட்டால் இதற்கு விளக்கம் சொல்வார்," என்றான் பரணி.

"கேட்டுப் பார்," என்று கூறியவாறே எழுந்த ராதா, "நான் எக்ஸிபிஷனிற்குப் போகிறேன். மாமா வந்தால் இந்தச் சாவியைக் கொடு," என்றபடி, இடுப்பிலிருந்து சாவியை உருவினாள்.

"மாமா வருவதற்குள் நீங்கள் வந்துவிடுவீர்கள். என்றைக்கு அவர் நடு ஜாமத்திற்கு முன்னால் வந்திருக்கிறார்?" என்று கேட்டுச் சிரித்தான் பரணி.

ராதாவின் முகத்தில் சோகம் படர்ந்தது.

"சரி சரி, எப்பவும் வரட்டும். நான் வருவதற்குள் வந்துவிட்டால் சாவியைக் கொடு," என்றாள்.



''எந்த எக்ஸிபிஷன்?''

''இந்திராணியின் போட்டோக கண்காட்சி நடக்கிறதே.''

''சேச்சே, அதற்கா?'' என்று முகத்தைச் சுளித்தான் பரணி.

''ஏன் அதற்கென்ன?''

''சீ, வெறும் ஆபாசம். அதற்குப் பெண்கள் போகக் கூடாது.''

''நான் பார்த்துவிட்டு வருகிறேன். சாவியை மாமாவிடம் கொடுத்துவிடு,'' என்றாள் ராதா.

''மாமா எப்படி வருவாரோ? போதையில் மயங்கித் தள்ளாடி வந்தால்?'' என்று கூறித் தலையைச் சொறிந்தான். ''நான் தனியாக எப்படி அவரைச் சமாளிப்பேன்?'' என்றான்.

''என்னமும் செய்,'' என்று எரிச்சலுடன் கூறி, சாவியை அவன் மடி மீது போட்டு விட்டு விரைந்து சென்று விட்டாள் ராதா.

**பு**கைப்படக் கண்காட்சியில் கூட்டம் மொய்த்துக் கொண்டிருந்தது. வந்திருந்தவர்களில் பெரும்பாலோர் மேல் மட்டத்தில் இருந்தவர்கள்தாம். சந்திரசூடன், காட்சிக் கூடத்தில் ஓரமாக நின்றவாறு கவனித்துக் கொண்டிருந்தார்.

இவ்வளவு கூட்டம்கூடியிருக்கிறதே: இவர்களுக்கு இதில் என்ன இவ்வளவு ஈடுபாடு? ஒரு பெண்ணின் கவர்ச்சிக்கா இவ்வளவு கூட்டம்?

சந்திரசூடன் இரண்டாவது முறையாக அந்தப் படங்களைக் காண்பதில் ஈடுபட்டார். ஒவ்வொரு படமாக நின்றுப் பார்த்துக் கொண்டு சென்றார்.....

இன்று இத்தனை பேரையும் ஆட்கொண்டு மனத்தைக் குறுகுறுக்க வைக்கும் இந்தக் கவர்ச்சியை, சந்திரசூடன் விரும்பியிருந்தால் ஆண்டு அனுபவித்திருக்க முடியும்.

ஆனால் சந்திரசூடன் அதில் அக்கறை கொள்ளவில்லை.

ஒருநாள் சொன்னாள்: ''எனக்கு நடிப்பில் திறமை இல்லை என்றே வைத்துக் கொள்

ர.சு.நல்லபெருமாள்



ளுங்கள். ஆனால் இன்று எனக்கு இருக்கும் புகழும் செல்வாக்கும் வேறு எவளுக்கு இருக்கிறது? கறுப்பாகக் குதிர் மாதிரி இருக்கிற அவலக்ஷணங்களுக்கெல்லாம் ஊர்வசிப் பட்டம். எனக்குத்தான் இல்லே.. உங்கள் பேனாவிற்கு வெறும் அறிவு மட்டும்தானிருக்கிறது; கண்கள் இல்லே.''

இதைக் கேட்டுச் சந்திரசூடன் சிரித்தார். ''நல்லவேளே, என் பேனா குருடாக இருக்கிறது. இல்லேயென்றால் உன் கவர்ச்சியின் போதையில் அறிவை இழந்திருக்கும்,'' என்றார்.

பாவம், ஊர்வசிப் பட்டம் வாங்க அவள் கொண்டிருந்த ஆசை... அவளுடைய நடிப்பைப் புகழ்ந்து அவர் எழுதியிருந்தால் போதும். தேர்வுக் குழுவில் அவர் அங்கம் வகித்த போது ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் கூடப் போதும்.

அவளோடு அவருக்கு ஏற்பட்டிருந்த நட்பை நினைவு கூர்ந்தார். அவர் சிபார்சு செய்யவில்லே என்பதற்காக அவர் மீது அவளுக்குக் கோபந்தான். ஆனால் அவருடைய நட்பை உதறிவிடவில்லே.

நிறைவேறாத ஆசையினால் மனம் உடைந்து தற்கொலே செய்து விட்டாளே என்ற எண்ணத்துடன் சந்திரசூடன் அவளுடைய ஒரு படத்தின் முன்னால் துக்கத்துடன் நின்று கொண்டிருந்தார்.

அந்தப் படத்தில் இந்திராணி ஓர் இளவரசியைப் போலிருந்தாள். சுருள் சுருளாகத் தலே முடி முதுகில் புரண்டது. ஏதோ ஒரு சிந்தனே வயப்பட்டவளாக மதுவைப் பாட்டிலிலிருந்து ஒரு கோப்பையில் ஊற்றிக் கொண்டிருந்தாள்.

இந்திராணியின் சினிமாப் படம் ஒன்று நூறாவது நாளே எட்டியிருந்த வேளே அது. அவள் மிகுந்த உற்சாகத்திலிருந்தாள். நூறாவது நாள் கொண்டாட்டத்தில் கலந்து விட்டு வீடு திரும்பிய போது சந்திரசூடனேயும் தன்னுடைய காரில் அழைத்து வந்தாள். அப்போது இரவு பதினெரு மணி இருக்கும். வீட்டிற்குள் அவளுடைய படுக்கையறையில் சந்திரசூடன் ஒரு சோபாவில் சாய்ந்திருந்தார். இந்திராணி மெல்லிய இரவு உடையை அணிந்தவாறு கையில் ஒரு மதுப் புட்டியையும் இரண்டு கண்ணுடிக் கோப்பைகளேயும் கொண்டு வந்தாள். சிறு ஸ்டூலின் மீது அவைகளே வைத்துவிட்டு அவருக்கு எதிரே இருந்த சோபாவில் அமர்ந்தாள்.

ஓ...! அந்த அறையின் அமைப்பும், குறைமையான விளக்கொளியும், அவளுடைய சன்னமான உடையலங்காரமும் சந்திரசூடனுக்கு ரம்மியமாகத்தானிருந்தன. சிருங்காரத்திற்கு ஏற்ற சூழ்நிலே.

மதுப் புட்டியைத் திறந்து மதுவை இரண்டு கோப்பைகளிலும் ஊற்றினுள். ''உங்களுக்குச் சோடாவா, மினரல் வாட்டரா?'' என்று கேட்டாள்.

''எனக்கு இப்போது வேண்டாம்,'' என்றார் சந்திரசூடன்.

''ஏன்?''

''எனக்கு இதில் அதிக ஈடுபாடு கிடையாது என்பதுதான் உனக்குத் தெரியுமே.''

''வேறு எதில்தான் உங்களுக்கு ஈடுபாடு?'' என்று கேட்டுச் சிரித்தாள்.

''இன்று நான் சந்தோஷமாயிருக்கிறேன். எனக்காகக் கொஞ்சம் அருந்துங்கள். உம்... குடித்தே தீர வேண்டும்,'' என்றவாறே கோப்பையை அவருடைய உதட்டில் வைத்து அழுத்தினுள்.

சந்திரசூடன் கோப்பையைக் கையில் வாங்கிக் கொண்டார். அவள் தன்னுடைய கோப்பையைக் கையில் எடுத்து உயர்த்திப் பிடித்தாள். அவரும் தம்முடைய கோப்பையை உயர்த்தினுர். இரண்டு கோப்பைகளேயும் ஒன்ருேடு ஒன்று உரசிக் கொண்டார்கள். ''சியர்ஸ்,'' என்ருர்கள். பிறகு உறிஞ்சத் தொடங்கினுர்கள்.

''எல்லாரும் என்னிடமிருந்து எதையாவது பறிக்கத்தான் வருகிருர்கள். நீங்கள் ஒருவர் தாம் எதையுமே என்னிடம் கேட்பதில்லே,'' என்ருள் இந்திராணி. ஒரே மடக்கில் பாதிக் கோப்பையைக் காலி பண்ணிவிட்டு, ஸ்டூலின் மீது வைத்தாள். பீங்கான் தட்டிலிருந்த வறுத்த முந்திரியை எடுத்துச் சுவைத்தாள்.

சந்திரசூடன் அமைதியாக மதுவை கொஞ்சம் உறிஞ்சிவிட்டு முந்திரிப் பருப்பை எடுத்தார்.

''என்னிடம் கேட்பதற்கு ஒன்றுமே இல்லேயா? உண்மையைச் சொல்லுங்கள். உங்களுக்குத் தேவையானது எதுவுமே என்னிடம் இல்லேயா?'' என்று கேட்டாள், இந்திராணி. கண்களில் சிவப்பேறியிருந்தது. முகம் சிவந்து விட்டது. குளிர்பதனப்படுத்தப்பட்டிருந்த அந்த அறையில் கூட அவளுடைய நெற்றியில் வியர்வைத் துளிகள் தோன்றியிருந்தன.

---

''என்னங்க, நம்ம டீ. வி. யை எவனே திருடிட்டுப் போயிட்டான்.''

''பேசாம இரு. ரெண்டு மூணு நிகழ்ச்சிகள் பார்த்ததும் திரும்பக் கொண்டு வந்து போட்டுவிடுவான்.''

—கிழை. அ. கதிர்வேல்.



''ஏன் இல்லே. உன்னுடைய நட்பு இருக்கிறதே,'' என்றார் சந்திரசூடன். ''கிராமத்தில் எனக்குத் தெரிந்த பட்டுவா நீ? நம்பவே முடியவில்லே,'' என்றார்.

''எனக்கே சந்தேகமாயிருக்கிறதே. ஒரு வேளைச் சோற்றுக்கு நாங்கள் திண்டாடியதை நினைத்தால் நெஞ்சில் எவ்வளவு வேதனை தோன்றுகிறது,'' என்று கூறிவிட்டுக் கோப்பையிலிருந்து மதுவை உறிஞ்சினுள். ''இப்போது என்னுடைய புகழ் கொடி கட்டிப் பறக்கிறது. இன்று நூறாவது நாள் விழாவில் பார்த்தீர்களே. எனக்கு ஈடு யார்? இன்று உங்களுக்கு என்ன வேண்டுமோ கேளுங்கள். தருகிறேன். எவ்வளவு பணம் வேண்டும்? ஆயிரம்? பதினுயிரம்? லட்சம்...? எவ்வளவு வேண்டும்?'' என்று கேட்டுச் சந்திரசூடனை வெறிக்கப் பார்த்தாள்.

சந்திரசூடன் சிரித்தார். மதுவைச் சிறிது உறிஞ்சி சப்புக் கொட்டினுர்.

''என்ன சிரிக்கிறீர்கள்? நீங்கள் அந்தக் காலத்தில் கிராமத்தில் பார்த்த பட்டு இல்லே நான். இப்போது நான் இந்திராணி. புகழ் பெற்ற நடிகை. என்னிடம் எது வேண்டுமானுலும் கேளுங்கள். புதுப் பத்திரிகை நடத்த வேண்டும் என்றீர்களே? லட்ச ரூபாய் தருகிறேன். பத்திரிகையைத் தொடங்குங்கள்,'' என்றுள் இந்திராணி. பேச்சுக் குளறியது. கண்கள் சிவப்பேறி ஜொலித்தன.

''பட்டு, எனக்கு ஒன்றும் வேண்டாம். உனக்குத் தூக்கம் வந்துவிட்டது. தூங்கப் போ. நான் போய்விட்டு நாளே வருகிறேன்,'' என்று கூறியவாறே எழுந்திருக்க முயன்றார்.

இந்திராணி எழுந்து அவருடைய தோள்களைப் பற்றிக் கொண்டு, ''ஊஹூம், போகக் கூடாது,'' என்றுள். ''நான் பட்டு இல்லே. இந்திராணி. இப்போது என்னுடைய ஆட்சி தான் நடக்கிறது. நான் இந்திராணி. எத்தனேயோ கவலேகள். இந்தப் புகழே கவலேயைத்தான் கொடுக்கிறது. இந்தப் புகழைத் தக்க வைப்பதற்காக நாயை விடக் கேவலமாக நான் நடக்க வேண்டியிருக்கிறது,'' என்று கூறிப் பெருமூச்சு விட்டாள்.

சட்டென்று அவருடைய காதருகே தன் உதடுகளே வைத்து, ''என்னுடைய உடல்கூட நல்லதில்லே,'' என்றுள். அவருடைய தோளில் முகத்தைப் புதைத்து அழுதாள்.

சந்திரசூடன் திடுக்கிட்டார். அவளுடைய வெகுளித்தனம் அவரை நெகிழ வைத்தது. அவள் கையைப் பரிவுடன் பற்றிக் கொண்டார். ''இப்போது அதைப் பற்றி என்ன பேச்சு. உனக்கு உறக்கம் வந்துவிட்டது. நிம்மதியாகத் தூங்கு'' என்று அவளுடைய முதுகைத் தட்டிக் கொடுத்தார். தலேயை வருடினுர்.

இந்திராணி அழுவதை நிறுத்திவிட்டுத் தலேயைத் தூக்கி அவரை வெறிக்கப் பார்த்தாள். விரக்தியோடு சிரித்தாள்.

''இந்த உடலேத்தான் எல்லாரும் பார்த்துப் பார்த்து மாய்ந்து போகிருர்கள். ஒ... ஒரு நாள் இந்த உடல் மறைந்துவிட்டால் இந்த ரசிகர்கள் என்ன பண்ணுவார்கள்? இவர்களேப் பழி வாங்க நானே என் உடலே அழித்து விடப் போகிறேன். அப்போது என்ன பண்ணுவார்கள்?'' என்று கூறிக் கடகடவென்று சிரித்தாள். கிறங்கிப் போய்ச் சந்திரசூடனின் தோளில் தலேயைச் சாய்த்துக் கொண்டாள்.

சந்திரசூடன் அவளேக் கைத்தாங்கலாக அழைத்துச் சென்று கட்டிலில் படுக்க வைத்தார். அவள் ஒரு குழந்தையைப் போல் சிணுங்கினுள். படுக்கையில் அலங்கோலமாகப் புரண்டாள்.

சந்திரசூடன் மெல்ல அவள் வீட்டிலிருந்து வெளியேறினுர்—

•

''ரொம்ப ரசித்துப் பார்க்கிறீர்களே,'' என்ற குரலேக் கேட்டுச் சுய நினைவடைந்த சந்திரசூடன் திரும்பிப் பார்த்தார். ராதா நின்று கொண்டிருந்தாள்.

''அடேயப்பா, என்ன கூட்டம்! அப்படி என்ன புதுமை இதில் இருக்கிறது?'' என்றுள்.

''புதுமை ஒன்றுமில்லே. புகழ்பெற்ற ஒரு நபரைப் பற்றிய அந்தரங்க இரகசியங்களேத் தெரிந்து கொள்வதில் உள்ள ஆர்வந்தான்,'' என்று சிரித்தார் சந்திரசூடன். ''நீ வரும்போது பீஷ்மரையும் அழைத்து வருவதுதானே,'' என்றார்.

''யாரை? பரணியையா? கூப்பிட்டேன். பதறியே போய்விட்டான்.''

''பார்த்தாலே பிரும்மச்சரியம் கெட்டு விட்டதாகப் பதறிப் போய்விடுவான்.''

''மகாத்மா காந்தியின் சீடன்,'' என்று சிரித்தாள் ராதா.

இருவரும் பேசிக் கொண்டே காட்சி அரங்கை விட்டு வெளியே வந்தனர்.

(தொடரும்)

---

''நான் சினிமாவுக்குப் போகும் போது கலர் படமுனு நல்லா விசாரிச்சுட்டுத்தான் போவேன்.''

''எதுக்கு?''

''சாயம் போகாத படமான்னு!''

—கீழை. அ. கதிர்வேல்.



# இனிமேல் இருட்டுதான்!

"கொஞ்சம் நில்லு ரம்யா!"

அம்மாவின் அதட்டலான தொனியில் நின்றாள்... திரும்பாமல் நின்றாள். அம்மாவே சுற்றிக் கொண்டு முன்னால் வரட்டும் என்று காத்திருந்தாள்...

"அழுத்தம்மா ஒனக்கு!" "விஷயத்தைச் சொல்லு!"

"வேலைக்குப் போற திமிரு..."

"எனக்கு டையமாச்சு..."

"நாலு காசு சம்பாதிக்கற கொழுப்பு!"

"நீ சொல்லப் போறதில்லே... ஒம்பதே கால் எக்ஸ்பிரஸ் பஸ்ஸை விட்டா மத்தியானம் மெமோ வரும் சீட்டுக்கு..."

"பொடவை ரொம்ப லேசா இருக்கு... ஜாக்கெட்ல கழுத்து இன்னும் க்ளோஸா இருக்கலாம்..."

"முக்காடு போட்டுக்கட்டுமா?"

"ராட்சஸி! வயசுப் பொண்ணும்மா நீ!"

நின்று நிதானமாக அம்மாவைப் பார்த்தாள்... வார்த்தை வார்த்தையாகப் பிரித்துச் சொன்னாள்...

"என்னைப் பாத்துக்க எனக்குத் தெரியும்மா..."

"பாத்துக்கற லட்சணம் இதுவா?"

அம்மாவின் இரைச்சலைப் பொருட்படுத்தாமல் வாசலில் இறங்கி நடக்கிறாள்... அம்மா, கோபத்தில் அடித்துச் சாத்தும் கதவு தூரத்தில் முனகுகிறது...

'பொடவைக்கே கனிக்கறியே! புருஷனுக்கு என்னம்மா செய்வே? சூரியிடம் சாயங்காலம் இதைச் சொல்ல வேண்டும்... என்ன செய்வான் சூரி...?'

சூரியை நினைத்த போது சின்னதாக சிரிப்பொன்று வந்து உதட்டு விளிம்பில் ஒட்டிக் கொண்டது.

சூரி இவளைக் கவர்ந்ததே வினோதமான ஒரு விஷயம்...: தொட்டால் ஒட்டிக் கொள்ளும் மைக் கறுப்பு சூரிக்கு...

அதுதான்... அந்தக் கறுப்புதான் அவனை ஈர்த்தது...

அந்த ஆபீசில் புதிதாக இவள் சேர்ந்து முழுசாய் ஒரு வாரம் கூட ஆகவில்லை.

இவளைச் சுற்றிச் சுற்றி ஆராதிக்கும் ஆண்கள் கூட்டம்...

இவள் உடலையே பார்த்துக் கொண்டிருக்கும் மகேந்திரன்... இவள் கன்னத்தில் விழும் குழியில், விழுந்து எழுந்திருக்க முடியாமல் முதுகை உடைத்துக் கொண்ட முனுசாமி...

வேலை கற்றுக் கொடுக்கும் சாக்கில் தன் சபலத்தைச் சொறிந்து விட்டுக் கொள்ளும் நாப்பது வயசு சங்கமேஸ்வரன்.

இதில் சூரி மட்டும், குனிந்த தலை நிமிராமல் வேலை பார்க்கும் வித்தியாசமான ஆண்...

"இவர் பேசவே மாட்டாரா?" பக்கத்து ஸீட்! ஷைலஜாவிடம் கேட்டுவிட்டாள் ஒரு நாள்...

"யாரு கரிப் பானையா? பேச என்ன இருக்கு அங்கே?"

அறையத் தோன்றியது ஷைலஜாவை.

கறுப்பு ஒரு தப்பா?

ஏன் இவனை வலிக்க வலிக்க அடிக்கிறார்கள்? பேசிப் பார்க்கலாமா?

"மிஸ்டர் சூரி... ஐ'ம் ரம்யா..."

எழுதிக் கொண்டிருந்தவன் நிறுத்தாமல், 'நமஸ்காரம்' என்றான்... இவளைப் பார்க்கவே இல்லை...

"வலியத் தேடி வரும் போது பதில் சொல்றது நாகரிகம்னு ஒங்களுக்குப் படலியா சூரி?"

சடாரென நிமிர்ந்தான்...

ஸ்நேகமாகச் சிரித்தாள்...

"உங்க சிரிப்புக்கு நா அர்த்தம் தெரிஞ்சுக்கலாமா மிஸ் மிஸ்...?"

"ரம்யா..." முடித்தாள்.

"நிச்சயமா கேலி இல்லே சூரி... நான் ஒங்க ஸ்நேகிதி...

"மனசுக்கு ஏதாவது நிறம் உண்டா சூரி, உங்களுக்கு இது பத்தின ஐடியா உண்டா?"

அவள் கேள்வியில் பிரமித்தான்...

உன் கறுப்பு என்னைக் கஷ்டப்படுத்தவில்லே என்கிறாளா? வருடிக் கொடுப்பது போல் பேசுகிறாளே இந்தப் பெண்! யாரிவள்?

மெதுவாக அவளைப் பார்த்துச் சிரித்தான்...

"ப்பா... சிரிக்கத் தெரியாதோன்னு நெனைச்சேன்..."

அவன் இங்கு வந்து சேர்ந்த இந்த ஒரு வருடத்தில் தேடி வந்து பேசும் ஒரே ஜீவன் இவள்தான்...

சூரியைச் சுற்றிவட்டமொன்றைப் போட்டு 'ஜம்'மென்று அதற்குள் தன்னை நுழைத்துக் கொண்டாள்...

அவனோடு மதியம் சாப்பாட்டைப் பகிர்ந்து கொண்டாள்... "எனக்கு இருட்டு ரொம்பப் பிடிக்கும்பா..." என்னு சொல்லு பார்க்கலாம்...?"

தேவிபாலா

''அதுவும் என்னை மாதிரி கறுப்பு...'' குரலில் உறுத்தலோடு சொல்வான் சூரி...

''ஏன் குரல் எறங்கிப் போச்சு...? நிமிர்ந்து தெம்பா சொல்லுப்பா... கறுப்புல இருக்கற அழகு ஒனக்குப் புரியாது... அந்த மினுமினுப்புல ஒரு கவிதையே இருக்குன்னு ஒனக்குத் தெரியுமா?'' கண்கள் விரியக் கேட்டாள்...

''ஒன்னைப் புரிஞ்சுக்க முடியலே ரம்யா... எல்லாரும் அப்படி நினைக்கலியே ரம்யா...''

''ஊரைப் பத்தி ஒனக்கெம்பா கவலே? எல்லாம் வெளிச்சமாவே இருக்கட்டுமே! என்ன நடக்கும்? லேட்டை அணைக்கலேன்னு உலகமே இல்லே...!''

''சமாதானமா?''

''இல்லே, சூரி, எனக்கு முகஸ்துதி தெரியாது... பட்டதைப் பட்னு நேராச் சொல்லிடுவேன்... ஒனக்கு கான்பிடன்ஸ் பத்தாது... செருப்புப் போட்டுக்காதே! நாளைலேருந்து 'ஷூ' போட்டுக்கோ, அதான் கெட்டப்... கொஞ்சம் தள்ளி வகிடெடுத்து படிய வாரு... அழகா இருக்கும்... தொங்கு மீசை ஒனக்குப் பொருந்தலே... ட்ரிம் பண்ணி சின்னதாக்கு... சின்னச் சின்னதா கட்டம் போட்டு இருக்கிற ஷர்ட்டைப் போடு...: வெளில விடாதே... இன்சர்ட் பண்ணு...''

அடுத்து வந்த நாட்களில் அத்தனை விஷயங்களையும் அமல்படுத்தினான்...

பார்த்துப் பார்த்துக் கவனமாகச் செய்தான்...

கண்ணாடியில் பார்த்த போது விசிலடிக்கத் தோன்றியது...





வந்தவர்: "உங்க படத்துல கதாநாயகிக்கு இண்டர்வல்லுக்கு முன்னாடி ஒரு குழந்தை பிறக்குது. இண்டர்வல்லுக்கு அப்புறம் ஒரு குழந்தை பிறக்குதே... ஏன்...?"

டைரக்டர்: "இரண்டு குழந்தைகளுக்கு மத்தியில் இடைவெளி வேணும்ல...!"

—வி. சாரதி டேச்க.

ஆபீஸில் அத்தனை கண்களும் முதுகில் கதை எழுத.

ரம்யா சிரித்தாள்.

நன்றியில் நனைந்தான் சூரி...

"உன்னைக் கல்யாணம் செஞ்சுக்க நான் இஷ்டப்படறேன்னு சொன்னா உன் பதில் என்னவா இருக்கும்பா?"

ஸ்பஷ்டமாக நொறுங்கினான் சூரி!

பெண்தானா இவள்?

இவள் புடவை கட்டிய ஆணோ என்று சந்தேகம் வந்தது...

மீசை இருக்கிறதா என்று மேலுதட்டுக்கு மேல் பார்வை ஓடியது...

"ஓகே! எனக்குச் சம்மதம்... உங்க வீட்ல?"

"பிரச்னைதாம்பா..."

"ஒப்புக்க மாட்டாங்களா?"

"எப்படி சொல்றே?"

"நீ சந்தனமாட்டம் ஜொலிக்கறே! என்னோட கறுப்பு ஒட்டுமா? இருட்டு வெளிச்சத்தோட கைகோர்த்துண்டு வர்றமாதிரி படும்..."

"அழகா இருக்கும்பா... விடிகாலை உதயம் மாதிரி வசீகரமா இருக்கும்... நெஞ்சை அள்ளிண்டு போகும்... கொஞ்ச நஞ்ச சந்தேகமும் இனிமே எனக்கில்லை..."

"எதிர்ப்பு அதிகமானா...?"

"தாங்கற சக்தி எனக்குண்டு... ஒனக்கிருந்தா, தாலியோட வா..."

'வெல்ட்' பண்ணும்போது வரும் வெளிச்சம் போல 'பளிச்' 'பளிச்'சென்று வார்த்தைகள்...

யோசிக்காமல், நிலம் பார்க்காமல், கண் உயர்த்திப் பேசும் இடம்...

முடியுமா என்னால்? இவளோடு குடித்தனம் பண்ணும் யோக்கியதை எனக்குண்டா? இந்த அக்னியில் நான் கருகாமல் தப்பி வெளியே வர முடியுமா?

"இன்னிக்கு சாயங்காலம் ஒப்பன் பண்ணப் போறேன் சூரி, எங்கப்பா கிட்ட...!"

"நெகடிவானா?"

"பெட்டில துணி கூட எடுத்து வச்சாச்சு ரெடியா... கத்தி வளைக்க மாட்டேன். நேரா பேசிடப் போறேன்... பயமென்ன? நீ ரெடியாது கேக்க வந்தேன்..."

"எனக்கு யாரும் இல்லை... அம்மா மட்டுந்தான். அவளும் பாதிநாள் அண்ணன் வீட்ல... தடையில்லே, நான் ரெடி!"

"வந்துருவேன்னு நெனக்கறேன்... வீட்ல கட்டாயம் எதிர்ப்புதான்... தாலியோட தயாரா இரு... ஷேவ் பண்ணிக்கலையா நீ?" முகவாயைத் தொட்டாள்...

"எமன்டா நீ!" —முறைத்தான் அவனை...

செல்லமாக அவன் மூக்கைத் திருகிவிட்டு நடந்தாள். கண்டல் பொட்டலத்தோடு பீச் மணலில் சுகமாக நடப்பது போல சுலபமானதா வாழ்க்கை?

இவள் அறிவு ஜீவியா? கிறுக்கா?

"நீ ஒரு பையனை இஷ்டப்படறே! அவன் பேரு சூரிய நாராயணன் அலையஸ் சூரி... நிறம் கிளியோபாட்ரா..."

"கல்யாணம் பண்ணிக்கற அளவுக்கு வந்தாச்சு ரெண்டு பேரும் ஐ மீன் மனசளவுல..."

"கொஞ்சம் இரு. இது காதல், மியர் இன்பாச்சுவேஷன்... கண்ணுக்கு அழகு எது வரைக்கும் தெரியுமா? கையில கிடைக்கிற வரைக்கும்..."

பெட்டியை கையில் எடுத்துக் கொண்டு அருகில் வந்தாள்...

கீழே வைத்துவிட்டு, குனிந்து பாதத்தைத் தொட்டாள்.

அம்மா அலறும்போது,

ஆட்டோவுக்குக் கைதட்டிக் கொண்டிருந்தாள்.

அம்மா வாயை மூட,

அப்பா கதவை மூடினார்.

**கோ**யிலில் வைத்து தாலி கட்டி,

ராம் வீட்டு மொட்டை மாடியில், கொத்த மல்லி மணக்க ரசம் ஊற்றி,

பீடாச் சிவப்போடு, கேலிகள் பறக்கக் கூட்டம் கரைந்து போன போது,

சூரி விலகி நின்று சிரித்தான்...

"இந்த இருட்டுல, மொட்டை மாடில, ரொம்ப அழகா இருக்கேடி! எப்படீடா என்னை விரும்பினே?"

"போப்பா நீ. வெக்கப்படணும்னு ஆசையா இருக்கு... ஆனா தெரியலே."

"அதென்ன போப்பா...? இனிமேல் நா புருஷன்!"

"இன்னும் நெருங்கிட்ட...!" கழுத்தைச் சுற்றிக் கைகளை வளைத்து மூக்கைப் பற்கனால் கவ்வினாள்...

அதுனால?

காதோரம் வந்து உதடுகள் புதைத்து...

"ச்சீ, போடா!"

"கொல்லணும்டீ உன்னை!"

**வா**சலில் ஒரு காலைக் குத்திட்டு, மற்றொரு காலை மடித்து அழகான ரங்கோலியை மலர வைத்துக் கொண்டிருந்தாள்... ஈரத்தலையில் டவல் முடிச்சு... தொடை வரை ஏறிய புடவை... ஆடு தசையில் ஒட்டிய ஈரப் பாவாடை...

# உங்கள் இல்லத்தருகே உங்கள் நலன் நாடும் நண்பர்



## எல்.ஐ.ஸி முகவர்

உங்களது இனிய எல் ஐ ஸி முகவரை ஒரு நண்பரிலும் மேலானவர் என்று குறிப்பிடலாம்.

ஏனெனில் அவர் உங்கள் வளமான வாழ்விற்கு வழிகாட்டி, சேமிப்பு ஆய்ந்துரையாளர், வரி சலுகை ஆலோசகர் என பலவும் ஒன்று திரண்ட நண்பராய் திகழ்கிறார்.

முன் மொழிவு எழுதுதல், பணம் செலுத்துதல், நியமனம், வாரிசு மாற்றம் மற்றும் உரிய காலத்தில் காப்புத் தொகை பெறுதல் போன்று பார்வைக்கு சிக்கலாய் தோன்றும் விதிமுறைகளை எப்படி செவ்வனே கடைப்பிடிப்பது என்றும் அறிவுறுத்துகிறார்.

உங்கள் சேமிப்பை தக்க முதலீடு செய்வதில் கருத்துரைப்பதோடு மட்டுமின்றி உங்கள் தேவைக்கேற்ற ஆயுள் காப்புத் திட்டங்களை தேர்ந்தெடுப்பதிலும் உதவுகிறார். உங்கள் மக்களின் உயர் கல்வி, திருமணம், வீடு கட்டுதல் போன்ற வருங்கால தேவைகளையும் செலவுகளையும் உளத்தில் கொண்டு பாலிஸி நிறைவு காலங்கள் எவ்வாறு அமையலாம் என தெரிவு செய்வதிலும் துணை நிற்கிறார். மேலும் ஆயுள் காப்பீட்டின் மூலம் வருமான வரி மற்றும் சொத்து வரி செலுத்துவதில் எவ்வாறு சலுகைகள் பெறலாம் எனவும் ஆய்ந்துரைக்கிறார்.

சுருங்கக் கூறின எவ்வித பலனும் கருதாது அவர் எல் ஐ ஸி யில் உங்கள் கண் மற்றும் செவிப் புலன்களாய் செயல்படுகிறார்.

உங்கள் இல்லத்தருகே உங்கள் நலன் நாடும் நண்பரான எல்.ஐ.ஸி முகவரிடம் உங்கள் சேமிப்பு திட்டங்களை விவாதிப்பதில் இன்னும் தாமதம் ஏனோ?

**எல்.ஐ.ஸி முகவர் உங்களுக்காக செயல்படட்டுமே!**

NPS-LIC-TA/85



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

1985-86 எல்.ஐ.ஸியின் முகவர்கள் ஆண்டு

அடுத்த வார தீபாவளி சிறப்பிதழில்...

கங்கை சுத்திகரிப்பு —
ஒரு பாவ மன்னிப்பு!
— கவர் ஸ்டோரி

ஷ்.... அந்தரங்கம்!



— பட்டுக் கோட்டை பிரபாகர்
எழுதும் குறுநாவல்.

''உள்ள வர்றியா ரம்யா...''

''இதை முடிச்சிட்டு வர்றேன்.. இரு!''

''வந்துட்டுப் போ ஒரு நிமிஷம்...''

''அட, என்னப்பா நீ?'' அலுத்துக் கொண்டே அவள் உள்ளே நுழைய அடித்துக் கதவைச் சாத்தினான் அவன்.

''ஏன் சூரி?''

''போதும் நீ கோலம் போட்டது?''

''பாதில் இருக்குப்பா...'' மறுபடியும் நகர,

''நில்லு ரம்யா, எதிர்வீட்டுக்காரன் அரை மணி நேரமா வாயில சிகரெட்டும், இடுப்புல கைலியுமா உரிச்சுக்கிட்டிருக்கான் உன்னே... நீயும் ஒன்னோட கோலமும்...!''

''அது கிடக்கு விடுப்பா... வெயிட் குடுக் காதே இதுக்கெல்லாம்...''

''ஸ்டாப் இட் நான்சென்ஸ்!''

''ஏன் சூரி இப்பிடி கோவிச்சுக்கறே?''

''நா ஒன் புருஷன்... அந்தச் சங்கடம் எனக்குத்தான் தெரியும்... ஒனக்கு வெக்கம், மானம் ஒரு எழவும் கிடையாது...''

''சூ... சூ... நீ... நீயாப்பா இப்பிடிப் பேசற?''

''முதல்ல இந்த வாப்பா, போப்பாவை விடு. ஆபாசமா இருக்கு... நாலு பேர் கேட்டா நாக்கைப் பிடுங்கிக்கணும் நான்.''

''நாலு பேருக்காகவா நாம் வாழறோம்? காதலிக்கும் போது எந்த நாலு பேருக்காக கவலைப்பட்டோம் சூரி? யார் அனுமதிக் காகக் காத்திருந்தோம்? சொல்லுப்பா! நாலு பேர்ங்கற பிரச்னை இல்லாம நடு ரோட்ல கால் வீசி நடந்த நமக்கு யாரைப் பத்தி கவலை சூரி?''

''நமக்குள்ள ஒரு இருத்தம்... ஒனக்குனு சொல்லு!''

''அப்படீன்னா நீ... நீ...''

''எனக்கு ரொம்ப சங்கடமா இருக்கு... பல விஷயங்கள் என்னே பாதிச்சிருக்கு... ஒரே ஆபீஸ்ல ரெண்டு பேரும் வேலை செய் யறதால செத்து செத்து பொழக்க வேண் டியதாயிருக்கு தினமும்...

''ஒன்னோட ஒவ்வொரு அசைவுக்கும் ஊர் என் பக்கமாத்தான் விரலை நீட்டும்...''

''இது முன்னால ஏன் உனக்குத் தோணலே சூரி...?''

''ரப்பிஷ்! அப்ப நா பாய் ஃப்ரெண்ட்! இப்ப புருஷன்... நீ இனிமே வேலைக்குப் போக வேணாம்... ரிசைன் பண்ணிடு...''

''நோ... ஏன் இந்த காம்ப்ளெக்ஸ் ஒனக்கு? உன் காம்ப்ளெக்ஸை போக்கினவளே நாந் தானே!''

''கறுப்புனு குத்திக் காட்டறயா? ஒனக்கு நான் பொருந்தலேன்னு பூடகமாகச் சொல்ல வர்றியா?''

''என்னாச்சு உனக்கு...? ஏன் எல்லாத்துக் கும் நெகட்டிவா பாக்கற?''

நெகட்டிவ்வோட நிறம் கறுப்பு... என் னோட நிறம்... அதுனாலதான்...''

''உனக்குப் புத்தி ஏன் மழுங்கிப் போச்சு?''

ஓரடி முன் வந்து, கன்னத்தில் பளீரென்று அறைந்தான்... ''சொன்னதைச் செய்!''

சரேலென நடந்து...

கதவை அடித்துச் சாத்திக் கொண்டு...

ரங்கோலியில் காலைத் தேய்த்து ஆவேச மாக நடந்து போனான்...

கைகளால் கன்னத்தைப் பிடித்துக் கொண்டு உட்காருகிறாள் ரம்யா...

ஏன் இந்த மாற்றம்?

இதுக்கு என்ன பேரு?

'மியர் இன்பாச்சுவேஷன்'- அப்பா சிரிக் கிறார்... 'கண்ணுக்கு அழகு எது வரைக்கும் தெரியுமாம்மா கையில கிடைக்கற வரைக் கும்...

காதலியா இருக்கும்போது கவிதையா இருக்கக் கூடிய பெண் மனைவியானதும் மாயமா மறைஞ்சிடறது சாத்தியமா?

விடிஞ்சதும் வெளுத்துப் போன மாதிரி...

'இருட்டைப் பார்த்தா எனக்குக் கவிதை எழுதத் தோணும் சூரி...!'

இனிமேல் இருட்டுதான்...

ஏராளமாக எழுது பெண்ணே!

# சிதார் மேதை ரவிசங்கருக்கு தபலா வாசிப்பவர் யாரென்று ஊகியுங்கள் பார்க்கலாம்!

ரவிசங்கரின் சிதார் நிகழ்ச்சியை டிவியில் பார்த்து, கேட்டு ரசிக்கலாம் என்றுதான் இவர் நினைத்தார்.

ஆனால், திடீரென்று ரவிசங்கரே நேரில் வாசிப்பது போன்ற உணர்ச்சி இவருக்கு உண்டானது!

உற்சாகமிகுதியில் தலையணையையே தபலாவாகப் பாவித்து தாளம் போடுகிறார் இந்த பரம ரசிகர்!

அதுவே ஸியர்ஸ் கலர் டிவி செய்யும் மாயம்!

கண்ணெதிரேயே நடைபெறுவது போன்ற தத்ரூபமான காட்சிகள். கண்கவரும் இயற்கையான வண்ணங்கள்.

ஒலியோ ஒரு அபாரமான அனுபவம். ஸியர்ஸ் டிவியில் கேட்கும் குரலுக்கு பதில் சொல்லவோ, சேர்ந்து பாடவோ தூண்டும் துல்லியம்!

ஸியர்ஸ் டிவி மிகச் சிறந்த அயல் நாட்டு டிவி தொழில் நுட்பத்தோடு தயாரிக்கப்படுகிறது.

மேலும், ஒவ்வொரு தயாரிப்பு நிலையிலும் ஸியர்ஸ் டிவி கடுமையான தரக்கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தப் படுகிறது.

இந்த உயர்தரம்தான் ஸியர்ஸ் கலர் டிவியில் நீங்கள் நிகழ்ச்சிகளைக் காணும்போது அவை நேரில் நடைபெறும் நிஜக்காட்சிகளைப் போலவே தோன்ற வைக்கிறது.

தத்ரூபமான வண்ண ஒளியும், செவிக்கினிய ஒலியும் ஒருங்கே இணைந்தது ஸியர்ஸ் கலர் டிவி.

காத்திருப்பானேன்?

ஸியர்ஸ் டிவியை இன்றே கண்டு, கேட்டு அந்த சுகானுபவத்தைப் பெறுங்கள்!

**ஸியர்ஸ் டிவியில் எது நிகழ்ந்தாலும் அதோடு மெய்மறந்து ஒன்றிடுவீர்!**



**SEARS ELCOT**

123, A/3 லாட்டியன் பிரிட்ஜ் சாலை,
திருவான்மியூர், சென்னை 600 041

Sista's - ST.340.85 TM.D

# சாதியற்ற சமுதாயம் பகற் கனவுதான்!




வட்டமேஜை

## ஒரு நிதர்சனம்

* சென்ற இதழில் வந்த 'இனிமேல் நாங்கள் செய்யக் கூடியது ஒன்றுமில்லை' சிறுகதை ஒரு நிதர்சனம். இங்கு ஒரு டாக்டர் தன் கிளினிக்கின் முகப்பில் ஒரு சிறிய பிளாஸ்டிக் போர்டு போட்டிருக்கிறார்: நான் சிகிச்சை அளிக்கிறேன், "அவன்" குணமாக்குகிறான்.

பூனா-32. மது. கஸ்தூரி.

* குல தருமம் சிறுகதை இதயத்தையே ரணமாக்கி விட்டது. ஒரு நல்ல சிறுகதை படித்த திருப்தி ஏற்பட்டது.

சீர்காழி-10. ஆர். எஸ். இராஜ்.

## வழி விடுக!

* தீபாவளி திருநாளே! நீ சீக்கிரம் வழி விடுக — "லக்ஷ்மி" எழுதப் போகும் "சொர்க்கத்தின் கதவுகள்" திறக்க!!

நாகப்பட்டினம்-1. நாகை. பொன்னி.

## வேறு ஜோக் எதற்கு?

* இந்திரா நினைவாலயம் கட்டி வரும் ஆந்திர குருஜி பற்றிய விஷயதானம் மிகவும் சுவாரஸ்யமாக இருந்தது. தனியாக மற்ற பக்கங்களில் ஜோக்ஸ் எதற்கு வீணாக? இது ஒன்றே போதாதா?

சென்னை-11. பானுமதி மனோகர்.



* 27.10.85 தேதியிட்ட சென்ற வார கல்கி இதழில் வெளியான, 'மண்ணுலே பொறந்து மண்ணையே பிசைந்து மண்ணுக்கே போறவங்க...' என்ற கட்டுரையில், இ. காங்கிரஸ் எம். எல். ஏ.வான முருகானந்தம் பற்றிக் குறிப்பிடும் போது அ. தி. மு. க. எம். எல். ஏ. என்று தவறுதலாகக் குறிப்பிட்டுச் செய்தி வெளியானமைக்காக வருந்துகிறோம்.

— ஆசிரியர்.

* 20.10.85 கல்கியில் மணி அய்யர் அவர்கள் மிகவும் அருமையான முறையில் திரு. வெங்கட் மற்றும் அனைத்து பிராமண இளைஞர்களுக்கும் ஒற்றுமையாக இருந்து சமூகத்தில் உள்ள குறைகளைக் களைய வேண்டும் என்றும் இட ஒதுக்கீடு போன்ற பெரிய பிரச்னைகளையும் சந்திக்கத் தயாராக வேண்டும் என்றும் மிகத் தெளிவாக எழுதியிருந்தார். தமிழ்நாடு பிராமணர் சங்கம் சென்னை மாவட்டத் தலைவர் S. பாலசுப்பிரமணியன் சார்பிலும் பிராமண சங்கத்தின் சார்பிலும் 'கல்கி'க்கும் திரு. V.S. மணி அய்யர் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

G. முரளீதரன்,
சென்னை மாவட்டச் செயலர்,
தமிழ்நாடு பிராமண சங்கம்.

## உங்களைப் பாராட்ட பேரணி

* நடுப்பக்கத்தில் போட்டுள்ள 'பேரணி' ஜோக்கைப் படித்துச் சிரித்து வயிறு வலித்தது. இதைப் போட்டதற்காக கல்கி வாசகர் அனைவரும் "பாராட்டுப் பேரணி" நடத்தி உங்களுக்கு மாலை போட வேண்டும்."

திருச்சி-1. நிர்மலா ஜேம்ஸ் மைக்கேல்.

* திருவெறும்பூரில் இந்திய வாலிப ஜனநாயக சங்கம் தஞ்சாவூர் மெயின் ரோட்டைச் சீரமைக்கக் கோரி நாற்று நடவுப் போராட்டம் நடத்தியது. சாலையில் நெற்பயிரை நட்டு வைத்தார்கள். போராட்டம் நடத்தியதின் விளைவு, அரசு சாலையைச் சீரமைக்கும் பணியில் ஈடுபட்டது. போராட்டம் நடத்தித்தான் எந்த ஒரு பிரச்னைக்கும் தீர்வு காண முடியும் என்ற நிலையை ஜனநாயக அரசு உணர்த்தி வருவது வருந்தத் தக்கதாகும்.

திருச்சி. வி. தேவராசு

* என் சகோதரியின் மகன் இந்த ஆண்டு தொழில் நுட்பக் கூடம் (பாலிடெக்னிக்)'ஒன்றில் சேர விண்ணப்பம் செய்தான். விண்ணப்பத்தான் தவிர அவனிடம் பிற்பட்ட, பழங்குடி இத்யாதி இனங்களின் பட்டியல் ஒன்று வழங்கப்பட்டது. அந்தப் பட்டியலுக்குள் அவன் அடங்கினால் அதற்கேற்ற சலுகைகள் பெறும் வாய்ப்பு உண்டு என்பதைத் தெரிவிக்கத்தான்! இப்பட்டியலில் காணும் சாதிப் பிரிவுகளின் எண்ணிக்கை — நம்புங்கள் — 369! வருடா வருடம் இந்த எண்ணிக்கை அதிகரிக்கவே செய்யும். இத்தனை பிரிவுகளை அரசு அங்கீகாரத்துடன் பட்டியல் போடும் நாட்டில் சாதிக் கொடுமை என்றைக்கு ஒழியப் போகிறது? இளைஞர்கள் சாதியினால் கிடைக்கும் லாபங்களை உணர்ந்தால் அதன் பாதிப்பிலிருந்து விடுபட விரும்பவே மாட்டார்கள். அரசியல்வாதிகளும் அப்படி விடுபட வகை செய்ய மாட்டார்கள். சாதியற்ற சமுதாயம் என்பது இந்த நாட்டில் பகற் கனவுதான்.

சென்னை-5. பெ. க. சங்கரன்.

(இக்கடிதம் பரிசு பெறுகிறது.)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Srilanka